# முன்னுரை

**கா**ந்தியடிகள் காலமானபோது ஐன்ஸ்டைன் சொன்னார்: "இப்படி ஒரு மனிதர் நரம்பும் சதையும் ரத்தமும் கொண்டு இந்தப் பூமியில் நடமாடினார் என்பதைப் பிற்கால சந்ததிகள் நம்ப மறுப்பார்கள்."

எடிட்டரைப் பற்றி நாங்கள் கட்டுரை எழுதக் காரணமும் இதுவே.

இப்படி ஒரு லட்சிய வெறி கொண்ட எடிட்டர், கொள்கைப் பிடிப்புள்ள பத்திரிகையாசிரியர், தமிழ்ப் பற்றும் தேசப் பற்றும் தெய்வப் பற்றும் மிகுந்த மாமனிதர், நம்பற்கரிய புத்தி வீச்சுக் கொண்டிருந்த அறிவாளி, சகல விதமான கலைகளையும் துய்த்து மகிழ்ந்த ரசிகர், தனக்குத் தெரிந்த தொழில் ரகசியங்களைத் தன் கீழுள்ள அனைவரும் கற்றுக் கொள்வது லாபமே தவிர நஷ்டமாகாது என்று நம்பிய பெருந்தன்மையாளர்—

நரம்பும் சதையும் ரத்தமும் கொண்டவராக இந்தத் தமிழ் நாட்டில் நடமாடினார் என்பது ரெகார்டாக வேண்டும் - எழுத்திலே பதிவு பெற வேண்டும் - என்பது எங்கள் ஆசை. காந்திஜிக்காவது ஆயிரக்கணக்கான புத்தகங்கள் வெளிவந்தன. அவருடைய பெருமைகளைப் பறைசாற்ற. தன் வாழ்க்கையில் சத்தியத்துக்கு ஏற்பட்ட சோதனைகளை அவரே சுயசரிதமாக எழுதினார்.

எங்கள் எடிட்டருக்கு அப்படி எதுவும் இல்லை. உயிருடன் இருந்த வரையில் தன்னைப் பற்றி ஒரு வரியோ, தபால்தலை அளவுக்குப் புகைப்படமோ வெளிவர அவர் அனுமதித்தது கிடையாது. ஆகையால் நாங்கள் எங்களுக்குத் தெரிந்த உண்மைகளைச் சொல்லாவிட்டால் அது சரித்திரத்துக்கு இழைக்கப் படும் துரோகமாகும் என்று நம்பியே இந்தக் கட்டுரைகளை எழுதினோம்.

எடிட்டர் காலமான செய்தி கிடைத்த தினத்தன்றே, நான் அவரைப் பற்றி எழுத வேண்டுமென்று ஆனந்த விகடன் ஆசிரியரவர்கள் பணித்தார். மாற்றார் பத்திரிகைக்கு விளம்பரம் தருவதாக இருக்குமே என்ற எண்ணம் கொஞ்சமும் இல்லாமல், என் மனத்தில் பட்டதைத் தொடர்ந்து எழுத இடம் கொடுத்தார். அந்த விசால இதயத்துக்கு என் நன்றி.

நாங்கள், நாங்கள் என்று பல இடங்களில் குறிப்பிட்டிருப்பதால், ஜ. ரா. சுந்தரேசன், புனிதன் ஆகியோர் எழுதிய கட்டுரைகளையும் இப்புத்தகத்தில் இணைப்பது பொருத்தமாகத் தோன்றியது. அந்தக் கட்டுரைகளை வெளியிட்ட கலைமகள், தினமலர், தினமணி கதிர், குங்குமம், மேகலா இதழ்களுக்கு நன்றி.

எடிட்டர் எங்களை எழுத்தாளர்களாகவும் பத்திரிகையாளர்களாகவும் பண்ணியதோடு மட்டுமில்லை. காந்திஜியைப் பற்றிய டி.எஃப். கராக்கா எழுதியது போல, 'He made men out of dust'. சீரிய, எளிய வாழ்க்கையைத் தானே வாழ்ந்து காட்டி முன்னுதாரணமாக அவர் திகழ்ந்ததால், நாங்களும் எங்களுடைய தனிப்பட்ட வாழ்க்கையில் தறிகெட்டுப்

போகாதவர்களாக உருவானோம். பதப்படுத்தக்கூடிய இளம் வயதில் அவர் எங்களுக்குக் குருவாக அமைந்திருக்காவிட்டால் யார் எப்படிப் போயிருப் போமோ சொல்ல முடியாது. எங்களிடம் எந்த நல்ல குணமேனும் காணப்பட்டால் அது அவர் மூலம் வந்ததாகும். எந்தக் கெட்ட குணமேனும் காணப் பட்டால் அது நாங்களாக ஈட்டிக் கொண்டதாகும்.

அத்தகைய குருநாதருக்கு நன்றி கூறும் அஞ்சலியாகவும் இந்த புத்தகம் இருக்கட்டும்.

என் கட்டுரைத் தொடர் ஆனந்த விகடனில் வந்து கொண்டிருந்தபோது, ஒரு நண்பர் "எல்லாம் நீங்களே செய்த மாதிரியும், எடிட்டர் ஒன்றுமே செய்ய வில்லை என்பது போலும் ஒரு தொனி தெரிகிறதென்று சிலர் சொல்கிறார்கள். You are showing him in a bad light என்று கூடச் சிலர் சொன்னார்கள்" என்று கூறினார். எழுத்துக்களை அளந்து போடும் வன்மை அவரளவு எனக்குக் கிடையாது. ஆகவே வார்த்தைப் பிரயோகம் எங்கேனும் சரியாக வரவில்லையோ என்னவோ. ஆனால், கட்டுரைகள் வந்துகொண்டிருந்த போது. எடிட்டரின் துணைவியாரை ஒரு முறை அவரது இல்லத்தில் மரியாதை நிமித்தம் சந்தித்தபோது. அவர், "உங்கள் கட்டுரைகளைப் படிக்கும்போது கண்ணெதிரில் எடிட்டர் நடமாடுகிற மாதிரி அவ்வளவு உண்மையாக இருக்கிறது" என்று சொன்னார். அதற்கு மிஞ்சிய பாராட்டுக் கிடையாது என்று நினைக்கிறேன்.

சுந்தரேசனும் சரி, புனிதனும் சரி, நானும் சரி இங்கே உண்மைகளைத்தான் கூறியிருக்கிறோம். உண்மையைத் தவிர வேறில்லை. சொல்லப் போனால்

சில விரும்பத்தகாத உண்மைகளை (நான் வேலை யிலிருந்து நின்று கொள்ள நேரிட்ட சூழ்நிலை உள்பட) நாங்கள் வெளியிட வில்லை. அவற்றைச் சொன்னால் அது எடிட்டரையே குற்றம் சாட்டுவது போலாகிவிடும். அது நியாய மில்லை. ஏனெனில், எங்கள் ஊனக் கண்ணுக்கும் தெரியாத ஏதோ ஒரு தர்மக் கோட்டுக்குக் கட்டுப்பட்டு அவர் செயல்பட்டு வந்தாராகையால், எங்களுடைய எந்த மன வருத்தத்துக்கும் அவரைப் பொறுப்பாளியாக்க நாங்கள் தயாராயில்லை.

சி. பா. ஆதித்தனார் அவர்கள், தமது 'தினத்தந்தி' பத்திரிகையை வெற்றிகரமாக நடத்துவதற்கு உறுதுணையாக இருந்த கொள்கைகள் என்னென்ன என்பதை விவரித்து, தமது அனுபவங்களின் அடிப்படையில், 'இதழாளர் கையேடு' என்ற ஒரு புத்தகத்தை வெளியிட்டிருந்தார். அதை எங்கள் எடிட்டர் வேதம் போல் மதித்து, முடிந்த வரையில் பின்பற்றி வந்தார்.

அதே போல், ஒரு வார இதழை வெற்றிகரமாக வெளிக்கொணர என்னென்ன வழிகளைக் கடைப் பிடிக்க வேண்டும் என்பதை எடிட்டரும் தமது அனுபவங்களின் வாயிலாகக் கூறியிருக்க முடியும். அவர் கூறாமலே போய்விட்டதால், ஞாபகம் வருகிற சிலவற்றையேனும் இந்தச் சந்தர்ப்பத்தில் சொல்லலா மென்று நினைக்கிறேன். எதிர்காலத்தில் புதிய பத்திரிகையாளர்களுக்கு இவை உதவியாக இருக்கும். (இவையெல்லாம் தற்காலத்துக்கு ஒவ்வாத பத்தாம் பசலிக் கொள்கைகள் என்று சிலர் எண்ணக்கூடும். அது அவர்கள் விருப்பம்.)

1. தாக்குதல்களைக் கண்டு துவளக் கூடாது என்பதில் எடிட்டர் உறுதியாக இருந்தார். மாறாக, தாக்குதல்கள் வரும்போது மகிழ்ந்தார்; வரவேற்றார். ஒரு வாரம் பத்திரிகையில் வந்த எதையும் யாரும் தாக்க வில்லை என்றால் அந்த வாரம் அவருக்குச் சாப்பாடு இறங்காது என்று கூடச் சொல்லலாம். எந்தப் பத்திரிகையில் தன்னைத் தாக்கிக் கட்டுரைகள் வருகின்றன என்பதை உன்னிப்பாகக் கவனிப்பார். தான் பார்க்க இயலாதபோது, நிருபர்களிடம் சொல்லி, கடைகளில் அத்தகைய பத்திரிகைகளைப் பார்த்து வாங்கி வரச் சொல்லுவார். ரொம்ப ரொம்ப ஆபாசமான மொழியில், தரம் குறைந்ததாக இருந்தால் மட்டும் விட்டுவிட்டு மற்றதை மகிழ்ச்சியுடன் கொட்டை எழுத்தில் பெரிதாக மறு பிரசுரம் செய்வார். நாலு பேர் தாக்கும்போதுதான் வாசகர்களின் பார்வையில் இருக்கிறோம், ஜீவனுடன் விளங்குகிறோம் என்பது அவர் நம்பிக்கை. தாக்குதலை வெளியிட்டுக் கொள்வது தாழ்ச்சி என்று ஒருபோதும் அவர் நினைத்ததில்லை.

2. வாசகர்களின் கடிதங்களைப் பிரசுரிக்கும் போதும் இதே கொள்கைதான் எடிட்டருக்கு. முந்தின வாரம் வெளியான விஷயங்களைக் குறைகூறி, கண்டித்து வரும் கடிதங்களுக்குத்தான் முன்னுரிமை. ஒரு பக்கத்தில் மொத்தம் பத்துக் கடிதங்கள் இடம் பெற்றிருந்தால் அவற்றில் ஆறு அல்லு ஏழு, குறை கூறும் கடிதங்களாக இருக்க வேண்டும். ஒரு விஷயத்தைப் பாராட்டிக் கடிதம் வெளியிட்டால், கூடவே அதைக் குற்றம் சொல்லும் கடிதமொன்றும் வெளிவர வேண்டும். வாசகர்களின் கடிதங்கள் கொண்ட 'பேஜ் ப்ரூஃப்' அவர் பார்வைக்குக்

கட்டாயம் அனுப்பியாக வேண்டும். பல சமயங்களில் அந்தப் ப்ரூஃபின்மீது 'க்ரிடிஸிஸம் கம்மி' என்று எழுதி எங்களிடம் திருப்பி அனுப்பி விடுவார். அதன் பின்னர் அந்த வாரம் தபாலில் வந்த எல்லாக் கடிதங்களையும் மறுபடி ஒருமுறை தேடிப் பார்த்து, குறை கூறும் கடிதங்களை எடுத்து அவரிடம் காட்டி அனுமதி பெற்றுப் பிரசுரிப்போம்.

3. வாசகருக்குச் சம்பந்தமில்லாத. வாசகருக்கு அக்கறையில்லாத விஷயங்கள் வாசகர்களுக்கான இடத்தை ஆக்கிரமித்துக் கொள்வது கூடாது என்று எடிட்டர் எண்ணினார். எனவேதான் தன்னைப் பற்றியோ தன் குடும்பத்தாரைப் பற்றியோ எந்தச் செய்தியும் அவர் வெளியிட்டது கிடையாது. புகைப்படம் பிரசுரித்தது கிடையாது. (அவர் காலமான தினத்தன்று அவரது புகைப்படத்தைக் கேட்டுப் பத்திரிகைக்காரர்களும், டெலிவிஷன் நிலையத்தாரும் எங்கள் மூவரையும் துளைத்து எடுத்து விட்டார்கள்.) அதே போல, விளம்பரம் கொடுக்கிறார்கள் என்பதற்காக அவர்களுடைய வீட்டுத் திருமணம், வருகை போகை பற்றிய செய்தியும் புகைப்படமும் வெளியிடக் கூடாது என்று தடுத்தார். வாசகருக்குச் சம்பந்தமில்லாத அந்த விஷயத்துக்குப் பிடிக்கும் இடத்தில் ஒரு ஜோக்கோ துணுக்கோ வெளியிடலாமே என்பார்.

4. முக தாட்சண்ணியம் என்பது கூடவே கூடாது என்பது எடிட்டரின் கருத்து. ரொம்ப ரொம்ப அவசியம் நேர்ந்தாலொழிய அல்லது பத்திரிகை சம்பந்தமான நிகழ்ச்சியாக இருந்தால் தவிர ஆசிரியர் குழுவில் சம்பளம் வாங்குகிற எவரும் போக

வேண்டாம் என்று சொல்வார். திரைப்படத் துறையினர் தங்கள் படத்தின் பத்திரிகைக் காட்சி களுக்குக் கூப்பிட்டால் மரியாதையுடன் மறுத்துவிட வேண்டும் என்று கட்டளையிட்டிருந்தார். விமரிசனம் செய்ய வேண்டிய படங்களை அவரும் டிக்கெட் வாங்கித்தான் செல்வார். ஆசிரியர் குழுவினரும் அப்படித்தான் செல்ல வேண்டும். இத்தகைய நிகழ்ச்சிகளில் நேருக்கு நேர் சந்தித்தால் உண்மையை மறைத்து, போலியாக எழுத வேண்டி நேரிடும் என்பது அவர் பயம்.

5. சினிமா என்பது வாசகர்களைக் கவரும் மிகப் பெரிய விஷயம் என்பதை எடிட்டர் உணர்ந்திருந்தார். ஆனால் சினிமாக்காரர்கள் தன் பத்திரிகையை உபயோகித்துக்கொண்டு விடக் கூடாது என்பதில் எச்சரிக்கையாக இருக்க வேண்டும் என்று வலியுறுத்திச் சொன்னார். நடுப் பக்கத்தில் பிரசுரிக்கப்படும் சினிமா ஸ்டில்களை ஒரு தனி நோட்டுப் புத்தகத்தில் குறித்து வைத்துக் கொள்வார். என்ன சினிமா, ஸ்டில்லில் இருப்பவர்கள் யார் யார், எந்தத் தேதியிட்ட இதழில் அது வெளியாகிறது என்பதை அந்த நோட்டுப் புத்தகத்தில் குறிப்பார். அதே சினிமாவைப் பற்றி, அதே நடிகர்களைப் பற்றி, அடுத்தடுத்த இதழ்களில் வெளிவந்து விடக் கூடாது என்பதில் மிகக் கவனம் காட்டுவார். அப்படி வந்தால் அது வாசகர்களுக்கும் சலிப்பு; குறிப்பிட்ட சினிமாவுக்கும் அதிகப்படியான விளம்பரம். ஒரு படம் அடுத்த வாரம் வெளிவருவதாக இருந்தாலோ, வெளிவந்து அச்சமயம் ஓடிக் கொண்டிருந்தாலோ, அது சம்பந்தமான ஸ்டில்லை வெளியிடக் கூடாது. இதை ஒரு கண்டிப்பான கொள்கையாக

வைத்திருந்தார். நிருபர்கள் கொண்டு வந்து தரும் செய்திகளிலும் மிகுந்த எச்சரிக்கையுடன் இருக்க வேண்டுமென்று வற்புறுத்திச் சொல்வார். (நான் ஒரு நிருபர் மூலம் செய்தி சேகரித்து 'லைட்ஸ் ஆன்' என்ற பகுதியை எழுதி வந்தேன். அந்தக் கட்டுரையை 'நான் போனேன்', 'நான் பார்த்தேன்' என்கிற பாணியில் எழுதியதை எடிட்டர் விரும்பவில்லை. 'நீங்களே நேரில் போய்ப் பாக்காதபோது அப்படி எழுதுவது அசத்தியம். அத்துடன் எந்த நிருபரும் அதைத் தான்தான் எழுதினேன் என்று சொல்லித் துஷ்பிரயோகம் செய்ய இடம் ஏற்படும்' என்று கூறினார். அதன்பின் நான் போனேன், நான் வந்தேன் என்று எழுதுவதை நிறுத்திவிட்டேன்.)

6. சினிமா விமரிசனம் எழுதும்போது, பெரிய நட்சத்திரங்கள் நடித்துப் பெரிய தயாரிப்பாளர் வெளியிடும் படங்களைக் கடுமையாகத் தாக்கலாம். முதல் காரணம், மக்கள் அவர்களிடம் நிறைய எதிர்பார்த்திருக்கும் போது மக்களை அவர்கள் ஏமாற்றியது பெரும் குற்றம். மன்னிக்கூடாதது. இரண்டாவது காரணம், எவ்வளவு தாக்கினாலும் அவர்களால் தாங்கிக் கொள்ள முடியும். (சிவாஜி நடித்த 'ஸ்ரீவள்ளி' படத்தை விமரிசனம் செய்தபோது, ஒரு பக்கம் முழுதும் 'முருகா முருகா முருகா' என்று எழுதினார். படத்தைப் பற்றி ஒரு வரி கூட எழுதவில்லை.) ஆனால் சின்ன நட்சத்திரங்களை வைத்துச் சின்னத் தயாரிப்பாளர் எடுக்கும் படம், அது எத்தனை மட்டமாக இருந்தபோதிலும், பாராட்டக் கூடிய அம்சங்களை (தேடிக் கண்டுபிடித்தாவது) பாராட்டி விட்டு, குற்றங்குறைகளை லேசாக இரண்டொரு வரி சொன்னால் போதும் என்று

எடிட்டர் கூறுவார். காரணம், கடுமையான விமரிசனங்களைச் சின்னவர்களால் தாங்கிக் கொள்ள முடியாது என்பது அவர் அபிப்பிராயம். 'செத்த பாம்பை அடிக்கிற மாதிரி இதிலென்ன வீரம்?' என்பார்.

7. தலையங்கம் எழுதும் விஷயத்திலும், ஏறத்தாழ இதுதான் அவருடைய கொள்கை. ராஜாஜியிடம் அவருக்கு எல்லையற்ற பக்தியும் விசுவாசமும் உண்டு. எனினும் ராஜாஜி (இரண்டாவது முறை) முதலமைச்சராகப் பதவி ஏற்றிருந்த சமயம், அவருடைய சில கொள்கைகளைக் காரசாரமாகத் தாக்கி எழுதி வந்தார். தி.மு.க அரசியலில் தலைகாட்டிச் சலசலப்பு ஏற்படுத்திக் கொண்டிருந்த நேரம் அது. ஒரு நாள் நான், 'இந்தத் தி.மு.க. காரர் களைத் தாக்காமல் ராஜாஜியைத் தாக்கி எழுதிக் கொண்டிருக்கிறீர்களே?' என்று கேட்டேன். எடிட்டர் சொன்ன பதில் இன்னும் என் நினைவில் இருக்கிறது. 'ராஜாஜியைத் தாக்கி எழுதினால் ஒரு பெரிய ஆளுடன் மோதுகிறோம் என்று நமக்குப் பெருமை உண்டு. தி.மு.க. ஒரு கொசு. அதனுடன் மோதுவதில் நமக்கு என்ன பெருமை?' என்றார். (பிற்காலத்தில் அந்தக் 'கொசு' புலியாக வளர்ந்த போது அதைத் தாக்க எடிட்டர் துப்பாக்கியைக் கையிலெடுக்க நேரிட்டது.)

8. புனிதமான விஷயங்களைப் பற்றித் தாழ்வாகவோ கேலியாகவோ எதுவும் பத்திரிகையில் வந்துவிடக் கூடாது என்பது எடிட்டரின் கண்டிப்பான கட்டளை. திருக்குறளும் கீதையும் அவருடைய இரண்டு கண்களாக இருந்தன. அவற்றைப் பற்றித் தவறாக எண்ணும்படி எதுவும் வெளியாக இடம் தர

மாட்டார். நான் பலமுறை வேடிக்கைக் 'கவிதை'கள் எழுதியிருக்கிறேன். ஒரு தடவை, குறள் பாக்களைப் போல் தொனிக்கும் வகையில் அரசியல் கிண்டல் எழுதியிருந்தேன். 'திருக்குறளைக் கேலி செய்கிற மாதிரி தோன்றும்' என்று கூறி அதை நிறுத்திவிட்டார். இன்னொன்றும் ஞாபகம் வருகிறது. கவிஞர் கண்ணதாசன் காலமானபோது, அவரைப் பற்றி ஒரு கட்டுரை எழுதச் சொன்னார். கண்ணதாசனுடன் நான் பல வருட காலம் நெருங்கிப் பழகியவன் என்பது அவருக்குத் தெரியும். நானும் உற்சாகமாக, சக்தி காரியாலயத்தில் நாங்கள் பணியாற்றியதையும் சேலத்தில் அவர் மாடர்ன் தியேட்டர்ஸ் ஸ்டூடியோவில் இருந்தபோது, நான் கோவையில் 'காலச் சக்கரம்' பத்திரிகையில் இருந்ததையும், இருவரும் சந்தித்த விவரங்களையும் எழுதினேன். அதைப் படித்துப் பார்த்து, முதலில் 'ரொம்பப் பிரமாதமாய் இருக்கிறது' என்று பாராட்டியவர், அச்சேறும் தருணத்தில் அதை நிறுத்திவிட்டார். "நீங்கள் எழுதியிருப்பது உண்மையான விஷயம்தான். வேடிக்கையாகத்தான் கூறியிருக்கிறீர்கள். இருந்தாலும், இப்போது அவருக்கு இருக்கும் செல்வாக்கைப் பார்க்கும்போது, உங்கள் கட்டுரை அவருடைய மதிப்பைக் குறைக்கிற மாதிரி அமைந்துவிடும்' என்று என்னிடம் பிறகு சொன்னார்.

9. பத்திரிகையின் முதல் பக்கத்தையும் கடைசிப் பக்கத்தையும் விளம்பரதாரர்களுக்குத் தரக் கூடாது என்பதில் விடாப்பிடியாக இருந்தார் எடிட்டர். (ரொம்ப ரொம்ப நிர்ப்பந்தம் ஏற்படும் போது வேண்டா வெறுப்பாக விதிவிலக்குத் தருவார்.) அந்த இரண்டு பக்கமும் வாசகர்களுக்கே உரியவை

என்பது அவர் கருத்து. அந்த இடத்தில், லே அவுட்டிலோ அல்லது விஷயத்திலோ புதுமையான ஒன்றைப் பிரசுரிக்க வேண்டும் என்று வற்புறுத்துவார். அதே போல் அட்டையைப் புரட்டியதுமே முதல் பக்கத்தில் 'ஐயோ!' 'ஐயையோ!' 'செத்தேன்!' 'உன்னைக் கொலை செய்வேன்!' என்பது போன்ற அமங்கலமான தலைப்புக்கள் வெளியிடக் கூடாது என்று தடுத்திருந்தார். (பொதுவாகவே, உள் பக்கங்களில்கூட அமங்கலமான, பயங்கரமான தலைப்புக்கள் வரக் கூடாதென்று வலியுறுத்துவார்.)

10. தனிப்பட்ட வாழ்க்கையிலும் சரி, பொது வாழ்க்கையிலும் சரி எவரையும் எடிட்டர் 'எதிரி' என்று கருதியதுமில்லை. குறிப்பிட்டதுமில்லை. ஒரு பத்திரிகையைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தபோது, எங்களில் யாரோ ஒருவர், 'நமது எதிரி' என்று குறிப்பிட்டு விட்டார். உடனே எடிட்டர், "அந்த வார்த்தையை உபயோகிக்காதீர்கள். 'நண்பன்' என்றே சொல்லுங்கள்," என்றார். கடைசி வரையில், அந்த இதழைப் பற்றிப் பேசும் போதெல்லாம், 'நண்பனில் இப்படிப் போட்டிருக்கிறார்கள். நண்பனில் அது வந்திருக்கிறது' என்றே அவரும் சொல்வார். நாங்களும் சொல்வோம். சாவியும் சோவும் மணியனும் சொந்தப் பத்திரிகை ஆரம்பித்தபோது, அவர்களைப் பேட்டி கண்டு, ஏன் பத்திரிகை ஆரம்பிக்கிறோம், அது எப்படி யெப்படி இருக்கும் என்ற விவரங்களைப் பெரிய கட்டுரையாகவே வெளியிட்டார். பத்திரிகைகளையும் பத்திரிகையாளர்களையும் மதிப்பாரே தவிர, கேலி செய்யலாமென்றோ, மட்டம் தட்டலாமென்றோ சொப்பனத்திலும் அவர் எண்ணியது கிடையாது.

11. எவ்வளவு சுவையான பகுதியாக இருந்தாலும் அது அதிக காலம் நீடிக்கக் கூடாது என்று எடிட்டர் சொல்லுவார். (விதிவிலக்கு: 'அரசு பதில்', 'ஆறு வித்தியாசம்'.) அதிகபட்சம் பதினைந்து வாரத்துக்கு மேல் சென்றால் வாசகர்களுக்குச் சலிப்பு வந்துவிடுமென்று கூறுவார். அதேபோல், பக்கங்கள் விஷயத்திலும் ஓர் எல்லை வைத்திருந்தார். சிறுகதைகள், தொடர்கதைகள் வேண்டுமானால் ஐந்து அல்லது ஆறு பக்கங்கள் வரலாமே தவிர, மற்றவை ஒரு பக்கம், இரண்டு பக்கம் அதிகம் போனால் மூன்று பக்கம் இருக்க வேண்டும் என்று விதித்திருந்தார். குறைந்த பக்கங்களில் வெளியிடுவதால் அதிக விஷயங்கள் கொடுக்க முடியும் என்பதோடு, பத்திரிகையில் விறுவிறுப்பும் அதிகமாகும் என்பது அவர் கருத்து.

12. அட்டைப்படம் ஒரு இதழைப் போல மறு இதழ் இருக்கக்கூடாது. ஒரு வாரம் குளோசப்பாக இருந்தால், அடுத்த வாரம் லாங் ஷாட் படமாக இருக்க வேண்டும். ஓர் இதழில் ஒற்றை ஆளாக ஒரே ஒருவர் இருந்தால் மறு இதழில் பலர் கூட்டமாக இருக்க வேண்டும். அப்போதுதான் வாரத்துக்கு வாரம் அட்டைப் படத்தில் வித்தியாசம் தெரியும் என்று எடிட்டர் சொல்வார். திடீர் திடீரென்று அட்டையில் புகைப்படத்துக்குப் பதில் ஒரு கார்ட்டூனோ அல்லது வாசகமோ இருக்கும்படி எதிர்பாராத விதமாக மாற்றுவார். கூடியமட்டில், அந்த வாரம் செய்திகளில் எது அதிகம் பேசப் படுகிறதோ அது அட்டையில் இடம் பெறவேண்டும் என்று அவர் வலியுறுத்தினார். (தவத்திரு ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகளைக் காஞ்சி பெரியவர் தமது வாரிசாக அறிவித்தபோது,

அவருடைய புகைப்படத்தை அட்டையில் வெளியிட்டார். பத்திரிகையின் மதிப்பு, விற்பனை இரண்டுமே கும்மென்று உயர்ந்தன.)

13. பரிசுகள் கொடுப்பதாயிருந்தாலும் சரி, விழாக்கள் நடத்துவதாக இருந்தாலும் சரி, அது பத்திரிகையின் சொந்தச் செலவில்தான் நடக்க வேண்டும் என்று எடிட்டர் வற்புறுத்தினார். இன்னொருவருடன் 'இணைந்து' நடத்தும் திட்டங்களை அவர் ஆதரித்ததே கிடையாது.

— இதுபோல எவ்வளவோ சொல்லிக் கொண்டே போகலாம்.

எங்கள் மூவருக்கும் இரண்டு வருத்தம் உண்டு சமீப காலமாக.

நாற்பது வருடத்துக்கு மேலாக எடிட்டர் செங்கோல் செலுத்திய அறையை அவருடைய நினைவாலயமாக வைத்திருக்க வேண்டும் என்று நாங்கள் விரும்பினோம். அவர் பயன்படுத்திய கீதை, திருக்குறள் புத்தகங்கள் மூக்குக் கண்ணாடி, பிளாஸ்டிக் பை, கைத்தடி, பேனா, தமிழ் ஆங்கில அகராதிகள் முதலியவற்றை அந்த அறையில் பத்திரப்படுத்தி வைக்க வேண்டும் என்பது எங்கள் ஆசை.

'அரசு' என்பது எடிட்டர் தாமே தேர்ந்தெடுத்து, தமக்கு மட்டுமே வைத்துக்கொண்ட புனைபெயர். அவர் ஊரில் இல்லாத சமயங்களில் நாங்கள் தலையங்கங்கள் எழுதியிருக்கிறோம். சினிமா விமரிசனங்கள் எழுதியிருக்கிறோம். புத்தக மதிப்புரைகள், பேட்டிகள் எழுதியிருக்கிறோம்.

ஆனால் 'அரசு பதில்கள்' எழுதியது கிடையாது. எழுத அவர் அனுமதித்தது இல்லை. ராத்திரி பன்னிரண்டு மணிக்கு மேல் போன் செய்து, அரசு பதிலில் ஒரு குறிப்பிட்ட வார்த்தையைச் சேர்க்கச் சொல்லுவார். அல்லது நீக்கச் சொல்லுவார். ஓரோர் கேள்விக்கு விடையை மூன்று மாதமாகத் தேடி ஆராய்ச்சி செய்து கண்டு பிடித்ததாகச் சொல்லியிருக்கிறார். அந்த அளவுக்கு அவர் தனக்கென்று வைத்திருந்த ஒரே சொத்து அது. அதை அவருக்கே விட்டுவிட வேண்டும் என்பது எங்களுடைய இரண்டாவது விருப்பம்.

இரண்டும் நிறைவேறவில்லை. பரவாயில்லை. எங்களைக் காட்டிலும் நெருக்கமாக எடிட்டருடன் பழகியவர்கள் - எங்களைக் காட்டிலும் அதிக காலம் பழகியவர்கள் - இருக்கிறார்கள். நாங்களாவது 'எடிட்டர்' என்றுதான் சொல்லிக் கொண்டிருக்கிறோம். அவர்கள் 'எங்கள் தெய்வம்' என்று அவரைப் பயபக்தியுடன் குறிப்பிட்டு வந்தார்கள். அவர்கள் பார்த்துக் கொள்வார்கள்.

'எடிட்டோரியல் மீட்டிங்' என்ற எங்கள் வாராந்தர ஆலோசனைக் கூட்டத்தில் நடைபெற்ற ஒரு விஷயத்தைச் சொல்லி முடித்துக் கொள்கிறேன்.

எடிட்டர், பப்ளிஷர், சுந்தரேசன், புனிதன், நான் ஆகிய ஐவரும் மெரினாவில் பேசிக் கொண்டிருந்தோம். நன்றாய் இருட்டி விட்ட நேரம். பப்ளிஷர் ஏதோ ஒரு கருத்துச் சொன்னார். எதைப் பற்றி என்பது நினைவில்லை. ஆனால் எடிட்டர் உணர்ச்சிவசப்பட்டு அவரிடம் சொன்னது மட்டும் நன்றாய் நினைவு இருக்கிறது.

"இதோ பாரய்யா, நான் மண்டையைப் போட்ட பிறகு, 'அடாடா! ஒரு நல்ல மனுஷன் போய்விட்டானே?' என்று நாலு பேர் சொன்னால் அது போதும் எனக்கு!" என்று அவர் அழுத்தமாகச் சொன்னது இன்னும் எங்கள் காதில் ஒலித்துக் கொண்டிருக்கிறது.

நாலு பேர் அல்ல, ஊரே இன்று அவரை நல்ல மனிதர் என்று சொல்கிறது. எங்களுக்கும் அதுவே போதும்.

**சென்னை – 23** **ரா. கி. ரங்கராஜன்**
**12.4.1995**



# எடிட்டர் எஸ். ஏ. பி.

ரா.கி. ரங்கராஜன்

## 1

"சரி, கிதை படிப்போம்...." என்றார் குமுதம் பப்ளிஷர் கலங்கிய விழிகளுடன். புரசைவாக்கம் ஹன்ட்டர்ஸ் ரோடில், எடிட்டரின் பங்களா.

முன்ஹாலில் எடிட்டரின் உருவப்படம் ஒரு முக்காலியின் மீது வைக்கப்பட்டு மாலை சாத்தப் பட்டிருக்கிறது. எல்லோரும் அழுது அரற்றி முடித்து, எடிட்டரின் உடல் அமெரிக்காவிலிருந்து எப்படி, எப்போது வரும் என்பதைத் தெரிந்துகொண்டு, கண்களைத் துடைத்துக் கொண்டிருந்த நேரம். அப்போதுதான் பப்ளிஷர் அதைச் சொன்னார்.

அதற்குக் காரணம் உண்டு.

எடிட்டருக்குக் கீதையைக் காட்டிலும் பிரியமானது வேறொன்றும் இருந்ததில்லை. கீதையைத் தவிர்த்து வேறொன்றையும் வாழ்க்கைக்கு நெறியாக அவர் கொண்டதில்லை.

முப்பத்தெட்டு வருடங்களுக்கு முன்பு ஒரு நாள் சின்மயானந்தா சுவாமிகளின் கீதை லெக்சரைக் கேட்டு, இன்றைய மனிதன் எவ்வளவு மாடர்னாக இருந்தாலும் கீதையின் கர்மயோகம் எப்படி வழிகாட்டுகிறது என்ற சுவாமிஜியின் புதிய கண்ணோட்டத்தையும் புதிய வியாக்கியானத்தையும் உணர்ந்து புல்லரித்து, கீதையைப் பாராயணம் செய்யும் வழக்கத்தை ஆரம்பித்து, புரட்சிகரமாக மாறிப்போனார் எடிட்டர். அதற்கு முன்பே அவரிடம் இலைமறைகாயாக இருந்த சீரிய பண்புகள் அன்று மலர்ச்சி பெற்றன. அறிவும் ஆற்றலும் கற்பனையும் செயல் வேகமும் அசுரத்தனமாக வளர்ச்சி பெற்றன.

அதற்கு அதிகாரபூர்வமாக அப்படியொரு பெயர் இல்லையே தவிர, 'கீதை கிளாஸ்' என்ற ஒன்று ஜனனமாயிற்று. மயிலாப்பூர் வெங்கடேச அக்ரஹாரத்தில் பப்ளிஷரின் வீட்டு மாடியில், வாரம் இருமுறை மாலை ஆறு மணி முதல் எட்டு மணி வரையில் ஒவ்வோர் அத்தியாயம் படிப்பதும், முந்தின கிளாஸில் படித்த சுலோகத்தையும் அர்த்தத்தையும் நெட்டுருப் பண்ணி வைத்து, ஒப்பித்து, விவாதிப்பதும் வாடிக்கையாயிற்று. திங்கட்கிழமையும் வியாழக் கிழமையும், சாயந்தரம் மணி ஐந்தரை ஆயிற்றென்றால் கையில் என்ன வேலை இருந்தாலும் அதை அப்படியே போட்டுவிட்டு, "கீதை கிளாஸுக்கு நேரமாச்சு சார்..." என்று சொல்லி ஜ. ரா. சுந்தரேசனையும் என்னையும் காரில் ஏற்றிக்கொண்டு தானே ஓட்டிச் செல்வது வழக்கமாயிற்று. சிலசமயம் புனிதனும் வருவார். காரில் போகும்போதும் மயிலாப்பூரிலிருந்து திரும்பும்போதும் பத்திரிகை விஷயமோ, கதை விஷயமோ, சினிமா விஷயமோ பேசக்கூடாது என்பது அவர் கட்டளை. படித்த, கேட்ட, அனுபவித்த உயர்ந்த விஷயங்களைப்

பற்றி மட்டுமே பேசலாம் அல்லது பக்திப் பாட்டுப் பாடலாம். பெரும்பாலும் சுந்தரேசன்தான் பாடுவார். நல்ல சாரீர வளம் அவருக்கு உண்டு. எடிட்டர் சன்னமான குரலில் 'ஹரே ராம ஹரே கிருஷ்ணா' பஜன் பாடுவார். அநேகமாக நான் சாட்சி மாத்திரமே.

ஆச்சரியம் என்னவென்றால், எவ்வளவு தீவிரமாகப் பேசிக்கொண்டிருந்தாலும் சாலையில் ஒரு சின்னப் பிசகுகூடச் செய்யாமல் சீராக கார் ஓட்டுவார் எடிட்டர்.

'கீதை கிளாஸ்' என்பது ஆரம்பத்தில் பத்துப் பன்னிரண்டு பேரைக் கொண்டதாக இருந்தது. வருடங்கள் ஓட ஓட எண்ணிக்கை சிறுத்து, கடைசியில் எடிட்டர், பப்ளிஷர், சுந்தரேசன், நான் என்று நால்வரோடு நின்றது. கடைசி சில வருடங்கள் நானும்கூட அதிகம் போவதில்லை. விடாப்பிடியாக மூன்றே பேர் இருக்கத் தொடங்கினார்கள். வாரம் இருமுறை இருந்த கிளாஸ், வாரம் ஒரு முறையாயிற்று.

ஆனால் இரண்டு வழக்கம் வைத்துக் கொண்டிருந்தார் எடிட்டர்.

வைகுண்ட ஏகாதசியன்று காலை கீதை பதினெட்டு அத்தியாயத்தையும் நாங்கள் ஒரே மூச்சாகப் பாராயணம் செய்து, அது முடிந்ததும் பஜன்ஸ் பாடிவிட்டுத் திரும்புவோம்.

இன்னொன்று, நெருங்கிய நண்பரோ உறவினரோ காலமானால், அவர்கள் வீட்டில் ஒரு ஓரமாக உட்கார்ந்து கொண்டு கீதை பாராயணம் செய்வது. வருகிறவர்கள் அந்தச் சூழ்நிலையில் ஒரு மூலையில் எடிட்டரும் நாங்களும் கீதை படிப்பதை விசித்திரமாகப் பார்ப்பார்கள். எடிட்டர் அதையெல்லாம் பொருட்படுத்த மாட்டார்.

அதனால்தான் இன்று அவர் மாலையும் உருவப்படமுமாக ஆகிவிட்டபோது "கீதை படிப்போம்" என்றார் பப்ளிஷர். அவரும் சுந்தரேசனும் நானும் கீதை படிக்கத் தொடங்கினோம்.

இரண்டாவது அத்தியாயத்தில் 'ஸ்தித ப்ரக்ஞன் யார்?' என்பதைக் கண்ணன் சொல்லுகையில்-

'துன்பத்தில் துடிக்காமல், இன்பத்தில் நாட்ட மில்லாமல், பற்று, அச்சம், சினம் அற்ற உறுதியான உள்ளத்தை உடையவன் ஞானி...

எங்கும் பற்றில்லாதவனாய், நலம் தருவதை அடைந்து மகிழாமலும் கேடு தருவதை அடைந்து நொந்து கொள்ளாமலும் எவன் இருக்கிறானோ அவனுடைய அறிவு உறுதிபெறுகிறது...

ஆமை தன் அவயவங்களை அடக்கிக் கொள்வது போல் பொருள்களிடத்திலிருந்து பொறிகளை முழுதும் உள்ளிழுக்க வல்லானுக்கு நிறை ஞானம் நிலைபெறுகிறது.

வினையாற்றக் கடமைப்பட்டுள்ளாய்; வினைப் பயனில் ஒருபோதும் உரிமை பாராட்டாதே...'

— ஆகிய சுலோகங்களைப் படித்தபோதும், பன்னிரண்டாவது அத்தியாயத்தில் -

'பகைமையையும் நட்பையும், அங்ஙனமே மானத்தையும் அவமானத்தையும் சமமாகக் கருதுபவன், புகழ்ச்சியையும் இகழ்ச்சியையும் ஒன்றாகக் கருதுபவன், கிடைத்ததில் திருப்தியடை பவன், உறுதியான உள்ளம் உடையவன், பக்திமானாகிய அம்மனிதனே எனக்கு உகந்தவன்.'

— என்ற சுலோகங்களைப் படிக்கையிலும் என் நெஞ்சு கனத்தது. உகந்தவனை ஆண்டவன் அழைத்துக் கொண்டுவிட்டான் என்று நினைக்கையில் எழுத்துக்கள் மறைந்து முகம் நிறைந்த சிரிப்புடன் எடிட்டர் என் கண்முன்னே தோன்றினார். ஒரே சமயத்தில் புராண காலத்து முனிவராகவும் இருபத்தோராம் நூற்றாண்டு இளைஞனாகவும் திகழ்ந்த வித்தைக்காரர் தோன்றினார். இஞ்சி இடுப்பழகாவையும் ரசித்து, ஆதிசங்கரரின் அத்வைதத்திலும் லயித்து, ரோம சாம்ராஜ்யம் பற்றிய கிப்பனின் புத்தகத்தையும் விளக்கி, டெண்டுல்கரின் அதிரடிக்கும் ப்ரையன் லாராவின் அதிரடிக்கும் உள்ள வேற்றுமைகளையும் விவரித்து, தமிழ்ப் பத்திரிகை யுலகம் பற்றி ஆனா ஆவன்னா ஞானம்கூட இல்லாமலே துணிச்சலுடன் நுழைந்து புதியதொரு சகாப்தத்தைத் தோற்றுவித்து, இவ்வளவுக்கும் நடுவிலே களிமண்ணைப் பிசைந்தெடுத்து எங்களையெல்லாம் எழுத்தாளராக்கி, தன்னை அழித்துக்கொண்டு பத்திரிகையை முன்னிறுத்துவதுதான் பெருமை என்று நம்பும் பத்திரிகையாளர்களாகப் பண்ணிய மாமனிதர் விசுவரூபம் எடுத்துத் தோன்றினார்.

1950-ம் வருடம் ஆகஸ்ட் 23-ம் தேதி பொழுது சாயும் வேளையில் காரிலிருந்து இறங்கிய அவருக்கு நமஸ்காரம் சொன்ன நாள் முதல், 1993-ம் ஆண்டு பிப்ரவரி முதல் தேதியன்று, 'உடம்பு சரியில்லை யென்றால் ஒரு மாதம் லீவு வேண்டுமானால் எடுத்துக் கொள்ளுங்களேன்' என்று அவர் கூறிய வார்த்தையை மீறி, காலைத் தொட்டு நமஸ்கரித்து விடைபெற்றுக் கொண்டது வரையில் -

எத்தனை நினைவுகள்!

# 2

அவர் எடிட்டர். நான் சப் எடிட்டர். அவர் முதலாளி. நான் ஊழியன்.

ஆனால், புத்தகங்களைப் பொறுத்தமட்டில் அவரும் நானும் நண்பர்கள். ஹன்ட்டர்ஸ் ரோடு இல்லத்தில், அவரை நான் முதன்முதல் சந்தித்த தினத்தன்று, அவருடைய புத்தக அலமாரியின் முன்னிலையில் இந்த நட்பு ஆரம்பமாயிற்று.

குமுதம் ஆரம்பித்து அப்போது மூன்று வருடங்கள் ஆகியிருந்தன. கல்கண்டு ஆரம்பித்து இரண்டு வருடங்கள் ஆகியிருந்தன. கல்கண்டு குழந்தைகள் பத்திரிகை என்று பெயரே தவிர, தமிழ்வாணன் அதில் "ஆக்ஷன்" கதைகளே எழுதி வந்ததால், அசலாகவே ஒரு குழந்தைப் பத்திரிகை நடத்த வேண்டும் என்று எடிட்டருக்கு ஆசை ஏற்பட்டு, 'ஜிங்லி' என்ற பத்திரிகையைத் தொடங்கியிருந்தார். அதில் பணியாற்ற வரும்படி எனக்கு அழைப்பு வந்திருந்தது. (எல்லாம் சிபாரிசுதான். என் மாமனாரும் பப்ளிஷரின் தந்தையும் மயிலாப்பூர் ஸ்ரீனிவாசப் பெருமாள் கோயிலின் வைதீக கோஷ்டியில் சிநேகிதர்கள்!)

நான் போனபோது எடிட்டர் வெளியே சென்றிருந்தார். காத்திருந்தேன். சற்று நேரத்தில் ஒரு கார் வந்து நிற்கும் ஓசை கேட்டது. சிறிய கறுப்பு நிற

உல்ஸ்லி காரிலிருந்து எடிட்டரும் பப்ளிஷரும் இன்னும் ஒருவரும் இறங்கி வந்தார்கள். எல்லோரும் ஏறத்தாழ என் வயதே! நான் என்னை அறிமுகம் செய்து கொண்டதும், 'இவரிடம் பேசுங்கள்' என்று அந்த மூன்றாவது இளைஞரைக் காட்டிவிட்டு மற்ற இருவரும் மாடிக்குப் போய்விட்டார்கள்.

அவர் பெயர் ஆர். நாராயணன். ராம. நாராயணன் என்ற பெயரில் குமுதத்தில் பல சிறுகதைகள், பேட்டிக் கட்டுரைகள் எழுதியவர். எடிட்டரின் நெருங்கிய நண்பர். லயோலா கல்லூரியில் அவருடன் படித்தவர். எடிட்டரும் பப்ளிஷரும் சட்டக் கல்லூரியில் சேர்ந்த பிறகு எக்ஸ்பிரஸ் பத்திரிகையில் புரூஃப் ரீடராக வேலை பார்த்து வந்த நாராயணனை எடிட்டர் அழைத்து வந்து குமுதம், ஜிங்லி ஆகியவற்றை மேற்பார்வை பார்த்துக் கொள்ளும்படி கூறி, தன் பங்களாவிலேயே தங்குவதற்கு இடம் கொடுத்து, சட்டக் கல்லூரியில் பகுதி நேரமாகப் படித்து வழக்கறிஞராக வருவதற்கு உதவி செய்தார். இன்று தியாகராயநகரில் பிரபலமான அட்வகேட்டாக இருக்கிறார் நாராயணன். இவருடைய ஒரு பிள்ளையும் மருமகளும் அட்வகேட்டுகள். இன்றைக்கும் குருஜி என்றுதான் அவருக்கு வணக்கம் செலுத்துவேன்.

நான் செய்ய வேண்டிய வேலை, சம்பளம் (தொண்ணூறு ரூபாய்) முதலியவற்றைத் தீர்மானித்து, செப்டம்பர் ஒன்றாம் தேதி முதல் வேலைக்கு வர வேண்டும் என்று நாராயணன் சொன்ன பிறகு நான் புறப்பட்டிருக்க வேண்டியதுதானே? செய்யவில்லை.

அடுத்திருந்த ஹாலில், இந்தக் கோடியில் ஒன்றும் அந்தக் கோடியில் ஒன்றுமாக இருந்த இரண்டு

குட்டையான கண்ணாடி பீரோக்களில் அழகாக அடுக்கப்பட்டிருந்த புத்தகங்கள் என்னை இழுத்தன.

அந்த ஹாலுக்குப் போவதற்கு எனக்கு எந்த உரிமையும் கிடையாது. இருந்தாலும் போனேன். குனிந்து என்னென்ன புத்தகங்கள் இருக்கின்றன என்று கவனித்தேன். பீரோக்களுக்குக் கண்ணாடிக் கதவு போட்டுப் பூட்டி, அவற்றின் சாவிகளும் அதிலேயே மாட்டப்பட்டிருந்தன.

"என்ன பார்க்கிறீர்கள்?" என்ற குரல் கேட்டது. எடிட்டர் நின்றிருந்தார். மிக அருகில் அப்போதுதான் அவரைப் பார்த்தேன். சிவந்த மேனி. அரைக்கை கதர் சட்டை. நாலு முழக் கதர் வேட்டி. கூரிய மூக்கு. மூக்குக் கண்ணாடி.

"சும்மா... புத்தகங்களைப் பார்த்தேன்...." என்றேன்.

"ஏதாவது புத்தகம் வேண்டுமென்றால் எடுத்துக் கொள்ளுங்களேன்..." என்றபடி கண்ணாடிக் கதவைத் திறந்துவிட்டார்.

நான் ஒரு புத்தகம் எடுத்துக்கொண்டேன். அது பெர்னார்ட் ஷாவின் வாழ்க்கை வரலாறு. என் கையிலிருந்து அதை வாங்கிப் பார்த்தார்.

"நல்ல புத்தகம். ஷாவிடம் பல வருடம் செக்ரெட்டரியாக வேலை பார்த்த ஒரு பெண்மணி எழுதியது. சுவாரஸ்யமாக இருக்கும்..." என்றார்.

(ஷாவின் படைப்புகளில் எடிட்டருக்கு மிகுந்த ஈடுபாடு உண்டு. ஒருமுறை சுந்தரேசனையும் புனிதனையும் என்னையும் மயிலாப்பூர் லஸ்ஸில்

இருந்த ஒரு கடைக்கு அழைத்துச் சென்று பெங்குவின் வெளியீடாக வந்திருந்த ஷாவின் நாடகங்களில் ஆளுக்கு அரை டஜன் பிரதிகள் தானே பணம் போட்டு வாங்கிக் கொடுத்தார்.)

எடிட்டர் வீட்டில் கீழே இருந்தது போல பத்து மடங்கு பீரோக்களும், நூறு மடங்கு புத்தகங்களும் மாடியில் இருந்தன. எடிட்டர் எப்போதும் அவற்றின் மத்தியிலே, நீண்ட கைப்பிடி போட்ட நாற்காலியில் அமர்ந்து, குறுக்கே ஒரு பிளைவுட் பலகையை வைத்துக்கொண்டு எழுதிக் கொண்டிருப்பார் அல்லது புரூஃப் திருத்திக் கொண்டிருப்பார். பக்கத்திலே நாற்காலிகளின் மீதும் தரையிலும் புத்தகங்கள் இறைந்து கிடக்கும். அவற்றை ஒழுங்குபடுத்திய பிறகுதான் உட்காருவதற்கு நமக்கு நாற்காலி கிடைக்கும்.

அநேகமாக எல்லா விடுமுறைத் தினங்களிலும் காலை வேளைகளில் எடிட்டரின் இல்லத்துக்குப் போய்க்கொண்டிருந்தேன். பத்திரிகை சம்பந்தப்பட்ட வேலைகள் இருந்தால் கொஞ்சநேரம் பார்ப்போம். மீதி நேரமெல்லாம் கதைகளையும் நாவல்களையும் பற்றித்தான் பேச்சு. எந்தக் கதையை எப்படி எழுத வேண்டும் என்பதற்கு உதாரணம் காட்டுவார். ஆயிரக் கணக்கான புத்தகங்கள் எப்படியெல்லாமோ வைக்கப் பட்டிருக்கும்போது, ஒரு குறிப்பிட்ட பீரோவில் குறிப்பிட்ட வரிசையிலிருந்து ஒரு குறிப்பிட்ட புத்தகத்தை எடுத்து, டாணென்று ஒரு பக்கத்தைப் பிரித்துக் காட்டிப் படிப்பார். அல்லது படிக்கச் சொல்லுவார். அவருடைய ஞாபகசக்திக்கு ஈடு இணை கிடையாது.

சில புத்தகங்கள் எடிட்டரின் தந்தை சேகரித்தவை. முத்து முத்தான ஆங்கில எழுத்தில் எஸ். ஏ. பழனியப்பன் என்று கையெழுத்திட்டிருப்பார். எடிட்டரும் ஆரம்ப காலத்தில் கையெழுத்திட்டுப் புத்தகம் வாங்கிய தேதியைக் குறித்திருந்தார். பிறகு அப்படிப் பெயர் எழுதிக்கொள்வது ஒருவிதமான அகந்தை என்று கருதி, Om என்று மட்டுமே எழுதித் தேதியிடத் தொடங்கினார்.

நூற்றுக்குத் தொண்ணூற்றொன்பது பங்கு, கதையம்சம் கொண்ட - ஆனால் இலக்கியத் தரம் வாய்ந்த - புத்தகங்களைப் பற்றித்தான் என்னிடம் பேசுவார். அறிவு ஜீவித்தனமான, உயர்ந்த விஷயங்களைக் கொண்ட புத்தகங்கள் என் மூளைக்கு எட்டாதவை என்று அவருக்குத் தெரியும். அவற்றைப் பற்றி என்னிடம் விவாதிக்க மாட்டார்.

வாங்கின புத்தகங்களும் வந்த புத்தகங்களும் மலை மலையாகக் குவிந்து பங்களாவிலும் இடமில்லாமல் போகவே, இரண்டு வருடங்களுக்கு முன்பு கீழ்ப்பாக்கம் ஹார்லிஸ் சாலையில் ஒரு வீடு வாங்கி, அங்கே புத்தகங்களை வைத்து நூலகமாக்கி விட்டார். லேனா தமிழ்வாணனின் மேற்பார்வையில், நூலகப் பணிகளில் அனுபவமுள்ள ஒருவர் எல்லாப் புத்தகங்களையும் அங்கே பிரித்துத் தொகுத்து வைத்திருக்கிறார்.

தினமணி ஏ. என். சிவராமன் அவர்களை நூலகத்தைத் திறந்து வைக்குமாறு கேட்டுக்கொண்டார் எடிட்டர். தள்ளாத வயதில் அந்த முதியவர் வந்திருந்து, புத்தகங்களைப் பார்வையிட்டு வெகு

அழகாகப் பேசினார். விழா எதுவும் இல்லை. நாற்பது, ஐம்பது நண்பர்கள் கொண்ட சிறிய கூட்டம்தான்.

எடிட்டரிடம் புத்தகங்கள் எடுத்துப் போவதும் திருப்பித் தருவதுமாக இருந்த ஆரம்ப நாட்களில் எடிட்டருக்குத் திடீரென்று ஓர் ஆசை ஏற்பட்டது. என்னுடைய பொது அறிவையும் உலக அறிவையும் அபிவிருத்தி செய்தே தீருவது என்று கங்கணம் கட்டிக் கொண்டார்.

ஒருநாள், "உங்களிடம் என்ஸைக்ளோபீடியா வால்யூம்கள் இருக்கிறதா?'' என்று என்னைக் கேட்டார்.

எவ்வளவு அபாயமான கேள்வியைக் கேட்டு விட்டோம் என்பது அப்போது அவருக்குத் தெரியாது. பாவம்.

# 3

"என்ஸைக்ளோபீடியாவா? என்னிடம் ஏது?" என்று நான் சொன்னதும், "அப்படியானால் வாருங்கள், டவுன் வரை போய்விட்டு வரலாம்...." என்று சொல்லி என்னைக் காரில் ஏற்றிக்கொண்டார் எடிட்டர்.

டவுனில் சுங்குராம செட்டித் தெருவில் 'ஸ்டாண்டார்டு லிட்டரேச்சர் கம்பெனி'க்குச் சென்று, "இவர் என் உதவி ஆசிரியர். காலியர்ஸ் என்ஸைக்ளோபீடியா ஒரு செட் இவருக்குத் தவணை முறையில் கொடுங்கள்...." என்றார்.

அட்லாஸ் சைஸில், வழவழவென்ற காகிதத்தில், பக்கத்துக்குப் பக்கம் படங்களுடன் இருபது வால்யூம்கள் கொண்டுவந்து தந்தார்கள்.

"மாதத் தவணை நூறு ரூபாய். முதல் தவணையை நான் கட்டுகிறேன். மீதியை நீங்கள் கட்டி வரவேண்டும். என்ன சொல்கிறீர்கள்...?" என்று எடிட்டர் என்னைக் கேட்டார்.

புத்தகங்களின் அழகில் நான் சொக்கிப் போனேன். "ஓ, அதற்கென்ன....?" என்று சம்மதம் சொன்னேன். எடிட்டர் பணம் கொடுத்தார். புத்தகங்களுடன் திரும்பினோம்.

"ஒவ்வோர் குமுதம் இதழிலும் இதிலிருந்து நான்கு நான்கு விஷயங்கள் எடுத்துத் துணுக்கு எழுதுங்கள். ஒரு துணுக்குக்கு ஏழரை ரூபாய் அன்பளிப்பு வீதம் முப்பது ரூபாய் ஆயிற்று. மாதம் தொண்ணூறு ரூபாய். (அப்போது குமுதம் மாதம் மூன்றாக வந்து கொண்டிருந்தது.) சுலபமாகத் தவணையைக் கட்டலாம்" என்றார். ஆனால் நாற்பது வருடங்களில் நான் நாலு துணுக்கு அதிலிருந்து எழுதியிருப்பேனா என்பதே சந்தேகம்.

முழுக்க முழுக்கச் சிறுகதைகளையே கொண்டிருந்த 'ஆர்கஸி' என்ற பத்திரிகையை எடிட்டர் வாங்கி வந்தார். பழைய இதழ்கள் எங்கே கிடைத்தாலும் நானும் வாங்கி வந்தேன்.

அவற்றில் வெளிவரும் சிறுகதைகலை முன்மாதிரியாகக் காட்டிக் காட்டி, செறிவுள்ள கதைகளை எழுத எப்போதும் தூண்டிக்கொண்டே யிருப்பார் எடிட்டர். பளிச்சென்ற ஆரம்பம், சுவாரஸ்யமான வளர்ச்சி, திடுக்கென்ற முடிவு - இவைதான் சிறுகதையின் அடிப்படையான லட்சணங்கள் என்பதை அவர் எங்களுக்கு வற்புறுத்திச் சொல்லிக் கொடுத்தார்.

அத்தகைய கதைகளை வெளியிடுகிறோம் என்கிற துணிச்சலில்தான், ஒவ்வோர் இதழிலும் உள்புற அட்டையில், 'நல்ல கதை என்று சொல்லாதீர்கள் - குமுதமான கதை என்று சொல்லுங்கள்' என விளம்பரம் செய்தார். ஒருமுறை எடிட்டரிடமே நாவலாசிரியர் பி.எம். கண்ணன் 'குமுதமான கதைகள் போட வேண்டியதுதான். நடுநடுவே நல்ல கதைகளும் போடுங்களேன்' என்று

கேலி செய்தபோதுகூட, அதைப் பற்றிக் கோபப்படாமல் புன்னகை செய்தார்.

அவரைப் பத்திரிகை ஆரம்பிக்கத் தூண்டியதே கதை எழுதுவதிலும் எழுதுவிப்பதிலும் அவருக்கிருந்த இந்த ஆர்வம்தான் காரணம்.

சட்டக் கல்லூரியில் படித்து முடித்து, ஆனால் வழக்கறிஞராகத் தொழில் தொடங்காமல் இருந்த காலத்தில் கதை எழுத வேண்டும், எழுத்தாளராக வேண்டும் என்று அடிக்கடி தன் நண்பரிடம் சொல்லிக் கொண்டிருந்தார்.

ஒரு நாள், அவருடைய மதிப்புக்குரிய நண்பரும் உறவினருமான ஒருவர். "ஏன் தம்பி... இப்படிச் சும்மா சொல்லிக் கொண்டே இருந்தால் எப்படி....? கதை எழுதிப் பாருங்கள். ஏதாவது பத்திரிகைக்கு அனுப்புங்கள். பிரசுரமாகட்டும். நீங்கள் எழுத்தாளர் என்பது நாலு பேருக்குத் தெரிய வேண்டாமா...?" என்று அன்புடன் ஓர் அதட்டல் போடவே -

மளமளவென்று மூன்று கதைகள் எழுதினார் எடிட்டர். இரண்டைப் பிரசண்ட விகடன் பத்திரிகைக்கும் ஒன்றை 'சுதேசமித்திரன்' வார இதழுக்கும் அனுப்பினார்.

அவை பிரசுரமாயின.

அந்த உற்சாகத்தில், அந்த உறவினரையே பாகஸ்தராகக் கொண்டு சிந்தாதிரிப்பேட்டையில் தேவி பிரஸ் என்ற அச்சகத்தை வாங்கினார். ஒரு பத்திரிகையும் துவங்க நிச்சயித்தார். வேறு

என்னென்னவோ பெயர்களை யோசித்துப் பார்த்து விட்டு, 'குமுதம்' என்ற பெயரைத் தீர்மானித்தார்.

மக்கள் மத்தியில் பத்திரிகைக்கு ஒரு மதிப்பும் அந்தஸ்தும் ஏற்பட வேண்டுமெனில், நாடறிந்த ஒரு மனிதர் கௌரவ ஆசிரியராக இருப்பது நலமென்று அவருக்குத் தோன்றியது.

எடிட்டரின் பெரியம்மா கணவரான டாக்டர் அழகப்பச் செட்டியார் 'வள்ளல்' என்று புகழ் பெற்றவராக, பண்டித நேரு உட்படப் பல தலைவர்களின் நட்பைப் பெற்ற பெரும் தொழிலதிபராக விளங்கிய சமயம் அது.

எடிட்டர் அவருக்கு ஒரு கடிதம் எழுதினார்.

'I am a man' என்று ஆரம்பித்து, தான் தனித்துவமுள்ள மனிதனாகத் தலைநிமிர்ந்து வாழ ஆசைப்படுவதை விவரித்து, நாலு பக்கம் எழுதினார். அவரைத் தன் பத்திரிகைக்குக் கௌரவ ஆசிரியராக இருக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டார்.

கடிதத்தைப் படித்த டாக்டர் அழகப்பா மனம் நெகிழ்ந்து எடிட்டரைக் கூப்பிட்டனுப்பினார்.

"ஏற்கெனவே நிறையப் பத்திரிகைகள் வந்து கொண்டிருக்கிறதே....? நீ வேறே ஆரம்பித்தால் எப்படி நடக்கும்...?" என்று கேட்டார்.

"இல்லை. மற்றப் பத்திரிகைகள் மாதிரி இல்லாமல், நான் வித்தியாசமாக நடத்தப் போகிறேன்..." என்று உறுதியுடன் கூறினார் எடிட்டர்.

அப்புறமும் டாக்டர் அழகப்பாவுக்கு அரை மனதுதான். என்றாலும், அந்த இளைஞரின்

ஆர்வத்தைப் புரிந்துகொண்டு "சரி, செய்...." என்று அனுமதி கொடுத்தார் (பின்னொரு காலத்தில் ஏடிட்டரே எங்களிடம் சொன்ன தகவல்கள் இவை.)

தாமரை மலர்கள் பூத்த ஓடையில் ஒரு யானை நிற்கும் காட்சியை அட்டைப் படமாகக் கொண்டு குமுதம் முதல் இதழ் வெளிவந்தது. குமுதம் என்ற லேபிளின்கீழ், 'கௌரவ ஆசிரியர் : டாக்டர் ஆர்.எம். அழகப்பச் செட்டியார்' என்று போடப் பட்டிருந்தது.

இதற்கிடையே 'ஜிங்லி' பத்திரிகை நிறுத்தப் பட்டுவிட்டது. என்னை வீட்டுக்கு அனுப்பிவிடாமல், கொஞ்ச காலம் கல்கண்டில் தமிழ்வாணனின் கீழே பணியாற்றச் செய்தபின், குமுதத்தில் என்னைச் சேர்த்துக் கொண்டார். ஹன்ட்டர்ஸ் ரோடு பங்களாவில், வாசல்புறம் இருந்த சிறிய அறையில் நாங்கள் நாலைந்து பேர் வேலை பார்த்தோம் (அந்த அறையின் முன்னிருந்த திறந்தவெளி, எடிட்டரின் பாட்டனார் காலத்தில் குதிரை லாயமாக இருந்ததாம்!). அதன்பின் சிந்தாதிரிப்பேட்டை அருணாசல நாயக்கர் தெருவில் தேவி பிரஸ்ஸின் மாடிக்கு மாறினோம். பிறகு புரசைவாக்கம் நெடுஞ்சாலையில் இப்போதுள்ள கட்டிடத்தில் குடியேறினோம்.

குமுதத்துக்குப் பத்து வயதாகியிருந்த போது டாக்டர் அழகப்பா காலமானார்.

அப்போது எடிட்டரும் பப்ளிஷரும் ஊரில் இல்லை. சுவாமி சின்மயானந்தரின் தலைமையில் வடஇந்தியாவில் இருபத்தைந்து நாள் தலயாத்திரை

சென்றிருந்தார்கள். டாக்டர் அழகப்பாவின் மறைவைத் தெரிவிக்கலாமென்றால், எடிட்டர் அந்தச் சமயம் எந்த ஊரில் இருக்கிறார் என்றே தெரியவில்லை.

புரசைவாக்கத்தில் இருந்த டாக்டர் அழகப்பாவின் இல்லத்துக்குப் பிரஸ் மானேஜருடன் சென்று மாலை வைத்து அஞ்சலி செலுத்திவிட்டுத் திரும்பினேன். அவருடைய திடீர் மறைவு எடிட்டருக்கு எப்படிப்பட்ட அதிர்ச்சியாக இருக்கும் என்பதை அப்போது நான் உணரவில்லை. உணராததோடு, அந்த அதிர்ச்சியை அதிகப்படுத்துகிற வகையில் ஒரு காரியம் செய்து வைத்தேன் - ரொம்பப் புத்திசாலித்தனமாகச் செய்வதாக எண்ணிக் கொண்டு.

# 4

டாக்டர் அழகப்ப செட்டியார் காலமாகி ஐந்தாறு நாட்கள் இருக்கும்.

அடுத்த 'குமுதம்' இதழின் மூவண்ண அட்டைக்கான மூன்று 'பிளாக்'குகளும் ப்ரூஃப்பும் வந்திருந்தன. அதில் குமுதம் லேபிளின் கீழே 'கௌரவ ஆசிரியர்: டாக்டர் ஆர்.எம். அழகப்ப செட்டியார்' என்று இருந்தது.

'அழகப்ப செட்டியார்தான் இறந்து போய் விட்டாரே...? இனிமேல் அவர் பெயரைப் போடுவது எப்படிச் சரியாக இருக்கும்...?' என்று என் மூளை தேவையற்ற) சிந்தையில் இறங்கியது.

உடனே, ரொம்பச் சுறுசுறுப்பாக நான் மூன்று பிளாக்குகளையும் மவுண்ட் ரோட்டில் இருந்த பிளாக் கம்பெனிக்கு அனுப்பி, டாக்டர் அழகப்பாவின் பெயரை எடுத்துவிடும்படி சொல்லி விட்டேன்.

வட இந்திய க்ஷேத்ராடனங்களை முடித்துக் கொண்டு எடிட்டர் ஊர் திரும்பினார். டாக்டர் அழகப்பாவின் இல்லத்துக்குச் சென்று துக்கம் விசாரித்துவிட்டு அலுவலகத்துக்கு வந்ததும், நான் அவரிடம் ரொம்பப் பெருமையாகக் குமுதம் அட்டையைக் காட்டி, நான் செய்த காரியத்தையும் சொன்னேன்.

எடிட்டர் அட்டையைப் பார்த்தபடியே மௌனமாக இருந்தார். முகத்தில் ஈயாடவில்லை. ஒன்றும் சொல்லாமல் இதழைத் திருப்பித் தந்தார்.

சில நாட்கள் கழித்து 'மூன்று கடிதங்கள்' என்ற தலைப்பில் எடிட்டர் ஒரு கட்டுரைத் தொடர் எழுதினார். வெவ்வேறு சந்தர்ப்பங்களில் டாக்டர் அழகப்பா தமக்கு எழுதிய மூன்று கடிதங்களை அடிப்படையாக வைத்து, அவருடைய குணநலன்களைப் போற்றி விவரித்திருந்தார். அப்போது ஒரு நாள் என்னிடம் மெதுவாக, "அவ்வளவு அவசர அவசரமாக நீங்கள் அழகப்ப செட்டியாரின் பெயரை நீக்கியிருக்க வேண்டாம்..." என்றார். அப்படிப் பெயரை முழுமையாக நான் நீக்காமல் இருந்திருந்தால், டாக்டர் அழகப்ப செட்டியாரின் பெயரை வேறு ஏதோ வகையில் எடிட்டர் அட்டையிலேயே இடம்பெறச் செய்திருப்பார் என்று பிறகுதான் புரிந்தது.

நான் செய்த காரியம் பற்றி அவர் எவ்வளவோ கோபப்பட்டிருக்க வேண்டும். சத்தம் போட்டிருக்க வேண்டும். ஆனால் மென்மையாகச் சொல்வதுதான் பெரும்பாலும் அவருடைய சிறப்பு.

எல்லா சந்தர்ப்பங்களிலும் எடிட்டர் சாந்தசொரூபியாகவே இருப்பார் என்று சொல்ல முடியாது. துர்வாசராக உருவெடுத்த நேரங்களும் பல உண்டு. அதற்கு நியாயமான காரணமும் இருக்கும். குறித்த வேலையைக் குறித்த நேரத்தில் செய்து முடித்தால் அவருக்குச் சந்தோஷம், எல்லார் முன்னிலையிலும் பாராட்டுவார். செய்து முடிக்கா விட்டால்!

வேலைக்குச் சேர்ந்த புதிதில் ஒரு நாள் ரா. பி. சேதுப் பிள்ளை, பெரியசாமி தூரன், பெ. நா. அப்பு ஸ்வாமி, கி. வா. ஜகன்னாதன் முதலிய ஐந்தாறு அறிஞர்களைப் பார்த்து, ஏதோ ஒரு விஷயம் குறித்து அவர்களுடைய கருத்தைக் கேட்டு வரும்படி என்னைப் பணித்திருந்தார்.

அன்று நான் அதைச் செய்யாமல் சில புத்தகங்கள் எடுத்து வருவதற்காக எடிட்டரின் வீட்டுக்குப் போனேன். மாலை ஐந்து மணி இருக்கும். வராந்தாவில் நின்றிருந்தவர், "என்ன, பேட்டி யெல்லாம் முடித்து விட்டீர்களா?" என்றார்.

பொதுவாகவே எனக்குப் பேட்டி என்றால் அலர்ஜி - கூச்சம். அதனால் அப்புறம் பார்த்துக் கொள்ளலாம் என்று அலட்சியமாக இருந்துவிட்டேன். ஆனால், எடிட்டர் கேட்டதும் வேறெதுவும் சொல்லத் தோன்றாமல், "ஆபீஸில் கார் இருக்கும் என்று பார்த்தேன். காணோம்... வேறெங்கோ வெளியே போயிருந்தது. இதுவரை வரவில்லை..." என்று சொல்லி வைத்தேன்.

எடிட்டரின் சிவந்த முகம் கோபத்தில் ஜிவுஜிவுவென்று மேலும் சிவந்துவிட்டது. "ஓகோ, அப்படியா....?" என்றவர், வீட்டின் உட்புறம் பார்த்து, "நாராயணன்... நாராயணன்...!" என்று கூப்பிட்டார்.

எடிட்டர் அவ்வளவு உரத்துக் கூப்பிட்டுக் கேட்டிராதவராகையால், பதறியடித்துக்கொண்டு உள்ளேயிருந்து ஓடிவந்தார் நாராயணன்.

"இவருக்குக் கார் வேணுமாம்! இல்லா விட்டால் பேட்டிக்குப் போக மாட்டாராம்..." என்று

சொல்லிவிட்டு, என்ன விஷயமாய் யார் யாரைப் பேட்டி காணவேண்டும் என்பதைக் கூறி, "நீ என்ன செய்வாயோ... ஏது செய்வாயோ... பஸ்ஸில் போவாயோ, நடந்து போவாயோ எனக்குத் தெரியாது... உடனே கிளம்பு!" என்றார்.

"இதோ...!" என்ற நாராயணன், போட்டிருந்த சட்டையைக்கூட மாற்றிக் கொள்ளாமல் தெருவுக்குப் பாய்ந்து விட்டார்.

நான் நடுநடுங்கிப் போனேன். காலில் விழாத குறையாக, "இல்லை... நானே போகிறேன்..." என்று சொல்வதற்கே பல நிமிடங்கள் பிடித்தன.

"வேண்டாம் சார்... நீங்கள் போக வேண்டாம். கார் வரட்டும்... அப்புறம் போகலாம் சார்..." என்றார் எடிட்டர். பொதுவாக எடிட்டர் 'சார்' போட்டுப் பேசினால் கோபமாக இருக்கிறார் என்று அர்த்தம். தமாஷான, குஷியான மூடில் இருக்கும்போது, "சுவாமிகளே, நான் என்ன சொல்றேன்னா..." என்று பேசத் தொடங்குவார்.

நான் மேற்கொண்டு பேசிக்கொண்டு நிற்காமல் உடனே வெளியில் புறப்பட்டேன். யார் யார் எங்கெங்கே இருக்கிறார்கள் என்ற விலாசம்கூடத் தெரியாது. இருந்தாலும் எப்படியோ விசாரித்து அறிந்துகொண்டு முதலில் ரா. பி. சேதுபிள்ளை வீட்டை அடைந்து, அவரைப் பார்த்து விஷயத்தைச் சொன்னேன்.

"இப்போதுதான் உங்கள் ஆபீஸிலிருந்து நாராயணன் என்று ஒருத்தர் வந்து, இதே விஷயமாகக் கேட்டுவிட்டுப் போனார்..." என்றார் சேதுப்பிள்ளை.

ஏமாற்றத்துடன் பெரியசாமி தூரனின் வீட்டுக்குப் போனேன். அங்கேயும் நாராயணன் முந்திக் கொண்டுவிட்டார். பெ. நா. அப்புசாமி வீட்டிலும் அப்படியே! நல்லவேளை, கிவா.ஜ.விடம் மட்டும் நாராயணன் போவதற்கு முன்பு நான் போய்ப் பேட்டி கண்டேன்.

இரவு பத்து மணி சுமாருக்கு எடிட்டரின் பங்களாவைத் திரும்ப அடைந்து, விவரம் தெரிவித்தேன்.

சான்றோர் சினம் என்பது சரியான வார்த்தை. "ரொம்பக் கோபித்துக் கொண்டுவிட்டேன், இல்லை...?" என்றார் எடிட்டர். அவருடைய அந்தஸ்துக்கும் பதவிக்கும் 'ஸாரி' என்று சொல்ல முடியாது. அம்மாதிரி நேரும் சமயங்களில், 'கொஞ்சம் கடுமையாகப் பேசிவிட்டேன், இல்லே....?', 'ரொம்பச் சிரமப்படுத்திவிட்டேன், இல்லே?', 'மறுபடி எல்லாவற்றையும் செய்கிற மாதிரி ஆகிவிட்டது போலிருக்கிறது, இல்லே....?' என்பார். நாங்களும் 'அதெல்லாம் ஒன்றுமில்லை... முன்னாலேயே நாங்கள் செய்யாதது எங்கள் தப்புதானே!' என்று சொல்லி, அவருடைய சங்கடத்தை நீக்குவோம்.

எடிட்டருக்குக் கோபம் வருவது அநேகமாகக் கதை விஷயமாகத்தான் இருக்கும்.

ஒவ்வொரு திங்கட்கிழமை காலையும் அலுவலகத்துக்கு வரும்போது, ஆளுக்கொரு சிறுகதை எழுதி வரவேண்டும் என்பது எடிட்டரின் கட்டளை.

ஒரு திங்கட்கிழமை நான் கதை எழுதவில்லை. 'பரவாயில்லை' என்று விட்டுவிட்டார். அடுத்த வாரமும் எழுதாமல் இருந்துவிட்டேன்.

"ஏன், எழுதுவதற்கு நேரமில்லையா....?" என்று சாதாரணக் குரலில் ஆரம்பித்தவர், கிடுகிடுவென்று கோபமடைந்தவராக, "உங்களை எப்படி எழுத வைப்பது என்று எனக்குத் தெரியும் சார்! சாட்டை எடுத்து அடித்து எழுத வைப்பேன்! தெரியுமா?" என்றார்.

அவர் அப்படிக் கோபித்ததில் நியாயம் இருந்தது. ஏனெனில், வாரா வாரம் வித்தியாசமான கதைகளை நாங்கள் எழுதுவதற்காக அவர் எடுத்துக் கொண்ட சிரமமும் கொடுத்த பயிற்சிகளும் கையாண்ட முறைகளும் இவ்வளவு அவ்வளவு அல்ல.

அவருடைய சில பயிற்சி முறைகள் விசித்திர மாகக்கூட இருக்கும்.

ஒருமுறை, ஆபீசில் இடைவேளைக்காக எழுந்து கொண்ட சமயம்... ஆளுக்கொரு துண்டுக் காகிதம் கொடுத்தார். உள்ளங்கை அகலத்துக்கு வெற்றுக் காகிதம்.

"மூன்று பேரிடமும் ஒரு ரூபாய் நோட்டு இருக்கிறதா....?" என்று கேட்டார்.

சட்டைப் பையைப் பார்த்து, "இருக்கிறது...." என்றோம்.

ஆனால், எதற்கு அப்படிக் கேட்டார்? புரியவில்லை. எதற்கு அந்தத் துண்டுக் காகிதம்...? அதுவும் புரியவில்லை.

# 5

எங்கள் மூவரிடமிருந்தும் மூன்று ஒரு ரூபாய் நோட்டு வாங்கிக்கொண்டார் எடிட்டர். துண்டுக் காகிதத்தில் அதைக் குண்டூசியினால் குத்தி எங்களிடம் தந்தார்.

"சாயந்தரம் நான் வரும்போது, இந்தத் துண்டுக் காகிதத்தில் ஏழெட்டு வரிக்குள் ஒரு கதை ஐடியா எழுதி என்னிடம் தரவேண்டும். ஐடியாவை நான் அப்ரூவ் பண்ணினால் நான் ஒரு ரூபாய் வைத்து உங்களிடம் இரண்டு ரூபாயாகத் திருப்பித் தருவேன். ஐடியா அப்ரூவ் ஆகவில்லையென்றால், உங்கள் ரூபாயை நான் எடுத்துக் கொண்டுவிடுவேன்" என்றார்.

அன்று முதல் பல நாட்களுக்கு நாங்கள் ஒற்றை ரூபாயோடு கதை ஐடியா தருவதும் எடிட்டர் அதைப் பார்த்து அங்கீகரிப்பதும் நிராகரிப்பதும் வழக்கமாயிற்று. நாங்கள் இழந்த ரூபாய்களும் அதிகம். பெற்ற ரூபாய்களும் அதிகம்.

ஒரு சீரியஸ் காதல் கதை, ஒரு 'லைட்' காதல் கதை. ஒரு குடும்பக் கதை, ஒரு க்ரைம் கதை, ஒரு கிராமியக் கதை என்று வெரைட்டியாக ஐந்து கதைகள் வெளிவர வேண்டும் என்பது எடிட்டரின் நோக்கம். வெளி எழுத்தாளர்களின் கதைகள் இரண்டைத் தேர்ந்தெடுத்த பிறகு, மிச்சமுள்ள பிரிவுகளுக்கு நாங்கள் கதை எழுதியாக வேண்டும்.

சில நாள் செய்தித்தாளைப் பிரித்து வைத்துக் கொண்டு, சிவப்பு பென்சிலால் கட்டம் கட்டிக் கொடுப்பார். அதில் சுவாரஸ்யமான செய்தி ஏதேனும் இருக்கும். அதை அடிப்படையாக வைத்துக் கதை எழுதும்படி பணிப்பார்.

தினம் காலையில் அவருடைய அறைக்கு வரும்போது எங்களுக்கு நேரிட்ட ஏதாவது ஒரு நிகழ்ச்சியைச் சொல்ல வேண்டும். அதில் கதையம்சம் இருப்பதாகத் தோன்றினால் அதைக் கதையாகப் பண்ணுங்கள் என்பார்.

ஒரு நாள் சுந்தரேசனின் மனைவி அடையாறி லிருக்கும் தாய் வீட்டுக்குச் சென்றார். கணவரிடம் சொல்லிக் கொண்டுதான் சென்றார். ஆனால், சுந்தரேசன் அதைக் கவனிக்கவில்லை. மனைவியைக் காணோமென்று பதறி அண்டை அயலில் தேடி, அடையாறுக்கு ஓடினார். அங்கே அவர் மனைவி பத்திரமாக இருப்பதை அறிந்ததும் உடனே திரும்பி விட்டார்.

இந்த நிகழ்ச்சியை எடிட்டரிடம் சுந்தரேசன் சொன்னபோது, "ஒரு கிழவர் தன் பெண்டாட்டியைத் தேடிக்கொண்டு அலைவதாக வைத்து வேடிக்கையாக ஒரு கதை எழுதுங்கள்" என்றார் எடிட்டர்.

சுந்தரேசன் எழுதினார்.

அப்புசாமி - சீதாப்பாட்டி முதல் கதை அப்படித்தான் பிறந்தது.

கதாகாலட்சேபக்காரர்கள் உபன்யாசம் பண்ணும் பாணியில் கதை எழுதுங்கள் என்று

புனிதனிடம் சொல்ல, அவர் 'சுந்தர பாகவதர்' என்ற பெயரில் பல சிறுகதைகள் எழுதினார்.

காகிதத்தில் பேனாவினால் இங்க் தெளித்து, கசக்கிவிட்டுப் பிரித்து, அதில் என்ன மாதிரியான காட்சி தோன்றுகிறதோ அதை வைத்துக் கதை எழுத வேண்டும் என்று சொல்லித் தந்தார். (அப்படி இங்க் சிதறலை அடிப்படையாகக் கொண்டு நான் 'பல்லக்கு' என்ற சிறுகதை எழுதி, அது தமிழ் எழுத்தாளர் சங்கத்தால் அந்த வருடத்தின் சிறந்த கதையாகத் தேர்ந்தெடுக்கப்பட்டது.)

எடிட்டர் விரும்புகிறபடியெல்லாம் கதை களை எழுதுவது எங்களுக்குச் சவாலாகவும், த்ரில்லாகவும் இருந்தது. அப்படி எழுதுவதற்கான சக்தியும் இன்ஸ்பிரேஷனும் அவரிடமிருந்தே வந்தன.

அடிக்கடி நான் ஹாஸ்ய நாடகங்கள் எழுதி வந்தேன். "அரசியல் தலைவர்கள் வீட்டில் நடப்பதாக ஹாஸ்ய நாடகம் எழுதிப் பாருங்கள்" என்றார் எடிட்டர் ஒரு நாள்.

செய்தியில் அடிபட்டுக் கொண்டிருந்த தலைவர்களைக் கதாநாயகர்களாக வைத்து, பல கேலி நாடகங்கள் தொடர்ந்து எழுதினேன்.

இப்படிக் கிட்டத்தட்டக் கதை எழுதும் இயந்திரங்களாகவே நாங்கள் மாறிவிட்டபோதிலும், அவர் சொல்லாமல் நாங்களாகவே எழுதிய கதைகளும் ஏராளம். படித்துப் பார்த்து நன்றாயிருந்தால் உடனே அச்சுக்கு அனுப்பிவிடுவார். அவர் படிக்கும்போது எதிரில் உட்கார்ந்துகொண்டு அவர் முகத்தில் தோன்றி மறையும் பாவங்களைக்

கொண்டு 'கதை தேறுமா தேறாதா' என்று அவஸ்தைப் பட்டுக் கொண்டிருப்போம். திருப்தியாக இல்லையென்றால், மடித்து ஓரமாக வைத்துவிட்டு, அதைப் பற்றிப் பேசாமல், "ஊம்... அப்புறம்?" என்று வேறு விஷயத்தைப் பேசத் தொடங்குவார். கதை கோவிந்தா என்று புரிந்துகொள்வோம். சில சமயங்களில் வெகுநேரம் கழித்து அந்தக் கதையை எடுத்து வைத்துக் கொண்டு, அதில் என்னென்ன மாற்றங்கள் செய்ய வேண்டும் என்று சொல்வார். சொல்வதோடு நிற்காமல், பக்கத்தில் இருந்து, வரிக்கு வரி, பாராவுக்கு பாரா மாற்றி எழுதுவதைக் கண்காணிப்பார்... பிற்பகல் மூன்று அல்லது நான்கு மணிக்கு ஆரம்பித்த வேலை, இரவு ஒன்பது - பத்து மணி வரையில்கூட நீடிக்கும்.

ஒரு சமயம் நான் எழுத வேண்டிய கதையைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்த போது, மேஜை டிராயரிலிருந்து ஒரு சிறு பைண்ட் புத்தகத்தை வெளியே எடுத்தார். "கொஞ்சம் படிக்கிறேன்... கேளுங்கள்" என்றார்.

ஒரு நல்ல கதை எழுத வேண்டுமென்றால், அதை எழுதுவதற்கு முன் ஒரு நல்ல கதையைப் படிக்க வேண்டும் என்று அவர் சொல்வது வழக்கம். அதன்படி ஏதோ ஒரு கதையைப் படிக்கப் போகிறார் என்று நினைத்தேன். முதல் சில வரிகளை அவர் படித்ததும் எனக்குத் திகைப்பாக இருந்தது. ஏனெனில், அது நான் எழுதி வெளிவந்திருந்த 'மாஜிஸ்திரேட்டுக்குத் தண்டனை' என்ற சிறுகதைதான்.

மூன்று வாரம் வெளிவந்திருந்த அந்த நீண்ட சிறுகதையை முழுதும் தானே படித்து முடித்தார்.

அந்த பைண்ட் புத்தகத்தில் என் கதை மட்டுமல்ல, சுந்தரேசனின் 'பூணூல்' என்ற கதை,

புனிதனின் 'பாதபூஜை' என்ற கதை ஆகியவையும் இடம் பெற்றிருந்தன. அவை நல்ல கதைகள் என்பது எடிட்டரின் அபிப்பிராயம். பல சந்தர்ப்பங்களில் அந்தக் கதைகளை அவரவர் முன்னே வாசித்துக் காட்டியிருக்கிறார். "நீங்கள் மக்குகள்.... எப்போது நல்ல கதை எழுதினோம் என்பது உங்களுக்கே தெரியாது" என்பார்.

எழுத்தாளனாக இருப்பவன் தான் அடைகிற அனுபவத்தை வீணடிக்கக் கூடாதென்பது எடிட்டரின் கருத்து. அதைக் கதையாகவோ, கட்டுரையாகவோ, குறைந்தபட்சம் ஒரு துணுக்காகவோ வாசகர்களுக்கு வழங்கிவிட வேண்டும் என்பார். நான் ஒரு முறை காது ஆபரேஷன் செய்துகொண்டு, அதனால் நல்ல பயன் ஏற்பட்டது என்று சொன்னதும், 'ஜனங்களுக்கு அது தெரியவேண்டும்.. எழுதுங்கள்' என்றார். டாக்டர் ஜே.ஆர். கிருஷ்ணமூர்த்தி என்ற நண்பர், சென்னைக்கு அருகே ஒரு சின்னக் கிராமத்தில் தொழில் தொடங்கிப் படாத பாடு பட்டுப் போனார். ஆனால், அந்த ஊரை விட்டு ஓட்டம் பிடிக்க விரும்பவில்லை. அங்கேயே இருந்து பணியாற்றி வெற்றி பெற்றார். ஆகவே, அவருடைய அனுபவங்களை ஒரு பெரிய பேட்டிக் கட்டுரையில் வெளியிடப் பண்ணினார்.

எடிட்டர் எப்போதும் ரயிலில் இரண்டாம் வகுப்பில்தான் வெளியூர் செல்வார். பல சமயங்களில் மேல் பெர்த்துதான் கிடைக்கும். அவருக்கோ மேல் பெர்த்தில் படுத்தால் தலை சுற்றும். சக பயணிகளிடம் கேட்டு இடம் மாற்றிக்கொள்வார்.

இதுபோன்ற அனுபவங்களையும் அதில் பெற்ற பாடங்களையும் எப்படி அவற்றை வெற்றிக்குப்

பயன்படுத்தி கொள்ளலாம் என்பதையும் சுவாரஸ்ய மாக, அங்கங்கே சஸ்பென்ஸ் வைத்துச் சொல்வார். அநேகமாக, தினம் காலையில் ஆபீஸ் கூடியதும் அரை மணி, ஒரு மணி நேரம் இதற்கே செலவழியும். பயனுள்ள, உற்சாகமூட்டக்கூடிய பேச்சாக இருக்கு மாதலால் அதற்கு 'பெப் டாக்' என்று பெயர் வைத்திருந்தேன்.

அவர் சொல்லும் அரிய பெரிய விஷயங்கள் பல காற்றோடு போய் விடுவதை விரும்பாமல், சுந்தரேசன் அவருக்குத் தெரியாமல் மேஜையின் பின்னே மடியில் காகிதம் வைத்துக் குறித்துக்கொண்டு வந்தார். எடிட்டர் ஒரு நாள் அதைக் கவனித்துத் தடுத்துவிட்டார். சுந்தரேசன் விடாமல், "சின்னச் சின்னதாக எவ்வளவோ நல்ல விஷயங்கள் சொல்கிறீர்கள். அவ்வளவும் வீணாகிறது. கேள்வி பதில் பகுதியாவது எழுதுங்கள்" என்றார்.

அதன்படி ஆரம்பமானதுதான் 'அரசு பதில்கள்'.

தான் துணிச்சலாகச் செயலில் இறங்குவதோடு மற்றவர்களையும் இறக்கி விடுவது எடிட்டருக்குக் கைவந்த கலை. அந்தச் சமயங்களில் அவர் நம்மீது வைக்கிற நம்பிக்கையும் கொடுக்கிற தைரியமும் அலாதி. தொடர்கதை எழுதுகிறேன் பேர்வழி என்று தலைப்பையும் அறிவிப்பையும் கொடுத்துவிட்டு முழிபிதுங்கிக்கொண்டு நிற்பேன். "முதல் அத்தியாயத்தை ஆரம்பியுங்கள். பிறகு தன்னாலே கதை வருகிறதா இல்லையா பாருங்கள்" என்று அடித்துச் சொல்வார்.

எடுத்துக்காட்டாக இரண்டொன்று சொல் கிறேன்.

# 6

ஒரு நாள் அலுவலகத்தில் புரூஃப் படித்துக் கொண்டிருந்தபோது, திடீரென்று ஒரு வார்த்தை என் மனதில் தோன்றியது - 'இது சத்தியம்' என்று. அதை ஒரு துண்டுக் காகிதத்தில் எழுதி எடிட்டரிடம் காட்டினேன். "இந்தத் தலைப்பு நன்றாயிருக்கிறது, இல்லை?" என்றேன். "பிரமாதமாக இருக்கிறது. கதை எழுதுங்கள்," என்றார்.

"தொடர்கதை எழுதப் போகிறேன்..." என்றேன். "தாராளமாக..." என்றார்.

சிறுகதையில் முதல் பாராவிலேயே வாசகரைக் கொக்கி போட்டு இழுக்கும்படி ஒரு விஷயம் இருக்க வேண்டுமென்று அவர் அடிக்கடி சொல்வார். அதுபோல தொடர்கதையில் முதல் அத்தியாயத்தில் 'கொக்கி' இருக்க வேண்டும் என்று வற்புறுத்துவார்.

அதன்படி, முதல் அத்தியாயத்தில் ஒரு கணவனும் மனைவியும் வெளியூர் போய்விட்டுத் திரும்புவதாகவும் பூட்டியிருந்த வீடு திறந்திருப்பதைக் கண்டு திடுக்கிட்டு உள்ளே போய்ப் பார்த்தால், யாரோ ஒரு பெண் குளியலறையில் குளித்துக் கொண்டிருந்தாள் என்றும் எழுதிவிட்டேன்.

நியாயமாய், முதல் அத்தியாயத்தில் அறிமுகப் படுத்துகிற பாத்திரங்கள்தான் கதாநாயகன் -

கதாநாயகியாக இருக்க வேண்டும். ஆனால், எனக்கு வேறொரு இளைஞனை — லாரி டிரைவரை — கதாநாயகனாக்க வேண்டுமென்று எண்ணம் ஏற்பட்டது. திமிர் பிடித்த, ஆனால் திறமைசாலியான ஒரு பணக்காரப் பாட்டியைக் கொண்டுவர வேண்டுமென்றும் ஆசை உண்டாயிற்று.

எடிட்டரிடம் சொன்னபோது, "அதிலென்ன கஷ்டம்? முதல் அத்தியாயத்தில் வந்த இளைஞனும் அவன் மனைவியும் கதாநாயகனின் சிநேகிதர்கள் என்றும், குளித்துக் கொண்டிருந்தவள் கதாநாயகன் அங்கே அனுப்பி வைத்த பெண் என்றும் அடுத்த அத்தியாயத்திலிருந்து கதையைக் கொண்டு போங்கள்," என்று சொல்லித் தந்தார்.

மலைபோல் தோன்றும் குழப்பங்கள், அவரிடம் சொல்லிக் கொண்டிருக்கும்போதே துரும்பாக மாறித் தலையிலிருந்து இறங்கிவிடுவது வழக்கம். அல்லது, நாம் சொல்லி முடித்த மறுவிநாடியே அதற்குத் தீர்வு சொல்வார்.

அந்தத் தொடர்கதை பாதி வந்திருந்தபோது, திடீரென்று ஒரு சந்தேகம் உதித்தது எனக்கு.

"ஏன் சார், 'இது சத்தியம்' என்று தலைப்பு வைத்துவிட்டேனே தவிர... கதாநாயகன் 'இதைச் செய்யாமல் விடமாட்டேன்! இது சத்தியம்!' என்றோ, 'இன்னாரை ஒழித்தே தீருவேன்! இது சத்தியம்!' என்றோ எங்கேயுமே சூளுரைக்கவில்லையே....? என்ன செய்யலாம்....?" என்று எடிட்டரிடம் கேட்டேன்.

அவர் சிரித்தபடி சொன்னார்: "இது சத்தியம் என்றால், சூளுரைப்பதும் சவாலும் சபதமும்தான்

என்று ஏன் எடுத்துக்கொள்கிறீர்கள்...? உலகத்தில் நிலையானது, நிரந்தரமானது, நெறியானது, தர்மமானது எதெல்லாம் உள்ளதோ, அதெல்லாம் சத்தியமானது. அந்தக் கண்ணோட்டத்தில் தலைப்புக்கு அர்த்தம் வரச் செய்யுங்கள்," என்றார்.

அவர் அப்படிச் சொன்ன பிறகு, கதையின் தன்மையே மாறிவிட்டது. கதையை முடிக்கும்போது கடைசி வரிகளாக, 'நினைத்தால் மனதுக்கு எரிச்சலும் பேசினால் வாய்க்குக் கசப்பும் செய்தால் உடலுக்குச் சோர்வும் தருவது எதுவோ.... அது சத்தியமல்ல. சிந்திக்கும்போது இதமும் சொல்லும்போது இனிமையும் செய்யும்போது தெம்பும் தருவது எதுவோ, அது சத்தியம். இது சத்தியம். இதுதான் சத்தியம். இது ஒன்றுதான் சத்தியம்...' என்று எழுதிக் கதையை முடித்தேன்.

'படகு வீடு' தொடர்கதை எழுதிய போதும் இதேமாதிரி பிரச்னை ஏற்பட்டது.

காஷ்மீர் அரசாங்கத்தின் விருந்தினராக, ஸ்ரீநகர் சென்று ஒரு வார காலம் படகு வீட்டில் தங்கிவிட்டுத் திரும்பிய சமயம், "அந்தப் பின்னணியில் ஒரு தொடர்கதை எழுத வேண்டும்," என்று கூறினேன். "சரி" என்றார்.

நானும் கேட்டுவிட்டேன். அவரும் அனுமதித்துவிட்டார். ஆனால், கதை...? கைவசம் எதுவும் கிடையாதே!

"முதல் அத்தியாயத்தை ஆரம்பியுங்கள். பிறகு பார்த்துக் கொள்ளலாம்..." என்று எடிட்டர் அடிக்கடி கூறும் மந்திரம் துணிச்சல் தந்தது.

இளைஞனொருவன் சில நாட்கள் உல்லாசமாகத் தங்கியிருக்கக் காஷ்மீர் செல்கிறானென்றும், மொட்டைத்தலையும் காவியுமாகத் துறவிக் கோலத்தில் திரும்பி வருகிறானென்றும் விமான நிலையத்தில் அவனுக்காகக் காத்திருக்கும் காதலி அதிர்ச்சியடைகிறாள் என்றும் முதல் அத்தியாயத்தை எழுதிவிட்டேன். மேலும் இரண்டு மூன்று அத்தியாயம் அடிபட்டன.

"கதையை பிளான் செய்து கொள்ளவில்லையே...? அடுத்து என்ன செய்வேன்...?" என்றபோது, எடிட்டர் "பதட்டப்படாதீர்கள்.... முதலில் ரிலாக்ஸ்டாக இருங்கள்..." என்று கூறிவிட்டுச் சொன்னார்:

"கதாநாயகன் ஒரு குறும்புக்காரன். ஆகவே, அவன் சாமியார் வேடம் போட்டிருப்பது குறும்பாகத்தான் இருக்கும் என்று கதாநாயகி நினைக்கிறாள். இதற்கு முன்னால் அவன் என்னென்ன சந்தர்ப்பங்களில், என்னென்ன குறும்புத்தனங்கள் செய்திருக்கிறான், அப்போது எப்படி எப்படி அவள் அவனை வழிக்குக் கொண்டு வந்திருக்கிறாள் என்பதை அவள் எண்ணிப் பார்ப்பதாக ஃப்ளாஷ் பேக்காகச் சில வாரம் எழுதுங்கள். அதற்குள் மீதிக் கதை ஓரளவு தோன்றிவிடும்...."

எடிட்டர் சொல்படியே நாலு வாரங்களுக்குப் பழைய நினைவுகளை எழுதி, மீதிக் கதையை அதற்குள் சரிப்படுத்தி வைத்துக்கொண்டு சமாளித்தேன்.

ஒரு சரித்திரக் கதை எழுத வேண்டும் என்று அடிக்கடி எடிட்டரை நச்சரித்துக் கொண்டிருந்தேன்.

சாண்டில்யன் அப்போது நட்சத்திர எழுத்தாளராக விளங்கி வந்ததால், என் வேண்டுகோளுக்கு இடம் கொடுக்காமலே இருந்து வந்தார் எடிட்டர்.

நடுவில் கொஞ்ச காலம் சாண்டில்யன் சரித்திரக் கதை எழுதாமல் இருந்தபோது, ஒரு நாள், "மவுண்ட் ரோட்டில் The Man From Rio என்று ஒரு ஆங்கிலப்படம் ஓடுகிறது. அதைப் பார்த்துவிட்டு வாருங்கள்," என்றார் எடிட்டர்.

பார்த்துவிட்டு வந்தேன்.

"ஹீரோவைக் கவனித்தீர்களா....? உற்சாக மான, குஷியான இளைஞன். ஆபத்துக்குமேல் ஆபத்தாக மாட்டிக் கொண்டு, வீரதீரத்துடன் தப்பி வருகிறான். நீங்கள் சரித்திரக் கதை எழுத வேண்டும் என்கிறீர்களே...? அந்த மாதிரி ஹீரோவைப் படைத்து எழுதுங்கள்..." என்றார் எடிட்டர்.

"சந்தோஷம்..." என்றேன்.

"ஒரு நிபந்தனை..." என்றார். "சேர, சோழ, பாண்டியர் பக்கம் போகக்கூடாது..." என்றார்.

எனக்கு இரட்டிப்பு சந்தோஷம். காரணம், பண்டைய தமிழ் இலக்கியம், பண்டைய தமிழ் வரலாறு ஆகியவை எனக்கு வீக் பாயிண்ட். வெள்ளைக்காரர்கள் வந்த புதிதில், சென்னையில் அடிமை வியாபாரம் நடந்ததாக ஒரு கட்டுரை படித்திருந்தேன். ஆகவே, அந்தப் பின்னணியில் கதையை ஆரம்பித்தேன்.

காஞ்சிபுரத்திலிருந்து மாட்டுவண்டி ஓட்டிக் கொண்டு சென்னைக்கு வருகிறான் ஒரு இளைஞன்

என்பதுதான் முதல் அத்தியாயம். கதாநாயகனுக்குப் பெயர் வைக்காமல், ‘காஞ்சிபுரத்தான்’ என்று அவனைக் குறிப்பிட்டேன். அடுத்த இரண்டு, மூன்று வாரங்களுக்கும் அப்படியே குறிப்பிட்டேன்.

“ஹீரோவுக்குப் பெயர் வைக்காமலே கதை போய்க் கொண்டிருக்கிறதே...?” என்று எடிட்டரிடம் சொன்னபோது, “அவன் பெயர் காஞ்சிபுரத்தான் என்றே இருக்கட்டுமே...?” என்றார்.

அந்தத் தொடர்கதையில் கடைசிவரை கதாநாயகன் பெயர் காஞ்சிபுரத்தானாகவே இருந்து விட்டது.

ஒரு வேடிக்கை என்னவென்றால், கதையின் முடிவில் - சென்னையில் அடிமை முறை ஒழிக்கப் பட்டு, வெற்றி வீரனாகக் காஞ்சிபுரத்தான் ஊர் திரும்பும்போது, கோட்டையை ஒருமுறை பார்க்கிறான். அங்கே கும்பினியார் கொடி பறக்கிறது. ‘எதிர்காலத்திலே எவ்வளவோ காஞ்சிபுரத்தார்கள் வருவார்கள். அவர்களுடைய கொடிகள் இங்கே பறக்கும்...’ என்று இந்தக் காஞ்சிபுரத்தான் நினைத்துக் கொள்வதாக முடித்திருந்தேன்.

அந்தச் சமயம் தேர்தலில் வெற்றி பெற்றுக் கோட்டைக்குள் நுழைந்தார் இன்னொரு காஞ்சி புரத்தார்.

அவர்... அறிஞர் அண்ணா!

## 7

எடிட்டர் தொடர்கதை எழுதுகிறார் என்றால் வாரத்தில் இரண்டு நாள் அல்லோல கல்லோலம்தான். அரைப் பக்கம் கால்பக்கமாக 'மேட்டர்' வரும்... பிறகு அடித்தல் திருத்தங்கள்... இந்தப் பகுதி 'ஏ', அந்தப் பகுதி 'பி' என்று மாற்றங்கள்; எல்லாம் முடிந்து விட்டது என்று பிரஸ்ஸில் நிம்மதிப் பெருமூச்சு விடும்போது கடைசி நிமிடத்தில் மறுபடி ஒரு தலைகீழ் மாறுதல்.

இவ்வளவையும் முடித்துக்கொண்டு அவரது சொந்த ஊருக்குப் புறப்பட வேண்டிய நிர்ப்பந்தம் ஒன்று காத்திருக்கும்.

ஒரு தடவை, அவர் ரயிலில் முதல் வகுப்பில் பயணம் செய்தபடி தொடர்கதையின் பாக்கிப் பகுதியை எழுதிக் கொண்டே செல்ல... நாங்கள் காரில் பின் தொடர்ந்து சென்று செங்கல்பட்டு ஸ்டேஷனில் கதைப் பிரதியை வாங்கிக் கொண்டு திரும்பினோம்.

ஆனால், இதையெல்லாம்விடப் பெரிய நிகழ்ச்சியொன்றை என்னால் மறக்க முடியாது.

எடிட்டர் 'இன்றே இங்கே இப்பொழுதே' என்ற தொடர்கதையை எழுதி வந்த சமயம், சின்மயானந்த சுவாமிகளுடன் உத்தரகாசிக்குச் செல்ல ஏற்பாடாயிற்று. புறப்படுகிற தினம். கடைசி அத்தியாயத்தைக் கொடுக்க வேண்டும். சாயந்தரம் ரயில்.

மத்தியானம் அவருடைய இல்லத்துக்கு போன் செய்து ஞாபகப்படுத்தினேன். 'சாயந்தரம் எங்களை வழியனுப்ப ஸ்டேஷனுக்கு வருவீர்கள் அல்லவா? அப்போது தருகிறேன்' என்றார்.

மாலை சென்ட்ரல் ஸ்டேஷனுக்குச் சென்றேன். எடிட்டர் உள்பட அவரவர்கள் தங்கள் தங்கள் லக்கேஜ்களை ஏற்றுவதும் இருக்கையைச் சரிபார்ப்பதுமாக இருந்தார்களே தவிர, என் பதைப்பை யாரும் லட்சியம் செய்வதாக இல்லை.

பெட்டி படுக்கைகளை வைத்து விட்டுக் கீழே இறங்கி வந்தார் எடிட்டர். வண்டி புறப்படப் பத்து நிமிடங்கள் இருந்தன.

"கதை..." என்றேன்.

"எழுத வேண்டியதுதான்" என்றார் ஒரு மர்மப் புன்னகையுடன்.

"இனிமேலா எழுதப் போகிறீர்கள்? அல்லது நடுவழியில் ஏதாவது ஸ்டேஷனில் போஸ்ட் பண்ணப் போகிறீர்களா?" என்றேன் திகைப்புடன்.

"அதெல்லாமில்லை. இப்படி வாருங்கள்" என்று கூறி. என்னைத் தனியே அழைத்துச் சென்றார். கடைசி அத்தியாயக் கதைச் சுருக்கத்தைச் சொன்னார்.

"கதை நன்றாகத்தான் இருக்கிறது. ஆனால், எப்போது எழுதப் போகிறீர்கள்?" என்றேன்.

"நான் ஏன் எழுதுகிறேன்?"

"பின்னே?"

''கதையைத்தான் சொல்லிவிட்டேனே... நீங்கள் எழுத வேண்டியதுதான்'' என்று சொல்லி விட்டுப் பெட்டியில் ஏறிக் கொண்டார். வண்டி புறப்பட்டுவிட்டது.

அவ்வளவு பெரிய பொறுப்பை என் தலையில் சுமத்திவிட்டாரே என்று ஒரு பக்கம் பெருமையாகவும் மறுபக்கம் அதிர்ச்சியாகவும் இருந்தது. ஆபீஸுக்கு ஓட்ட ஓட்டமாய்த் திரும்பி வந்து அவர் எழுதியிருந்த முந்திய அத்தியாயங்களைக் கூர்ந்து படித்தேன். ஏனெனில் எடிட்டரின் நடையில் செறிவு இருக்கும். என் நடை சற்று ஸிம்பிள். மேலெழுந்தவாரியானது. அவருடைய நடையை ஆராய்ந்து மனத்தில் இருத்திக் கொண்டு எழுதி முடித்து, முற்றும் போட்டுக் கம்போஸுக்கு அனுப்பி வைத்தேன்.

ஒரு மாதம் கழித்து ஊர் திரும்பிய எடிட்டர். இந்தப் பாவி எப்படி எழுதியிருக்கிறானோ என்ன பண்ணியிருக்கிறானோ என்று துளியும் கவலைப் படவில்லை. அதைப் பற்றிக் கேட்கக்கூட இல்லை. பத்து நாள் கழித்து, நானாகவே ''கடைசி அத்தியாயத்தைப் பார்த்தீர்களா?'' என்றேன்.

"எதற்குப் பார்க்க வேண்டும்? அதெல்லாம் ஜமாய்த்திருப்பீர்கள்" என்று சொல்லிவிட்டு அன்றைய அலுவல்களில் மூழ்கிவிட்டார். நான் எழுதியதைப் பார்த்தாரா, படித்தாரா, மகிழ்ந்தாரா, சினந்தாரா எதுவும் இன்றளவும் எனக்குத் தெரியாது.

நாங்களெல்லாம் சிண்டைப் பிய்த்துக் கொண்டு, குழம்பிப்போய், பயந்து நடுங்கிக் கொண்டிருக்கும் தருணங்களில் எடிட்டர் சிறிதும்

அசராமல் இருப்பார். இரண்டே இரண்டு சந்தர்ப்பங் களில்தான் அவர் தன்னை மறந்து வாய்விட்டு அழுது நான் பார்த்தேன். ஒன்று ஊரில் அவருடைய பெரியப்பா உடல்நிலை ரொம்ப மோசமாக இருக்கிறது என்ற செய்தி வந்தபோது, இன்னொன்று, நேருஜி இறந்தபோது, "ராஜாஜி என்ன சொல்லி யிருக்கிறார், பார்த்தீர்களா? நேரு ஒரு ஜென்டில்மேன் என்று சொல்லியிருக்கிறார். ஜென்ட்டில்மேன்... ஜென்ட்டில்மேன்" என்று சொல்லிக் கொண்டே யிருந்தவர் விம்மி விம்மி அழ ஆரம்பித்துவிட்டார்.

மற்றப்படி எந்தச் சந்தர்ப்பத்திலும் கலங்கிய வரல்ல. ஒரு சமயம் கலைஞர் கருணாநிதியின் கதையைத் தொடராகப் பிரசுரித்து வந்தோம். (இத்தனைக்கும் அவருடைய பத்திரிகையில் ஏற்கெனவே வெளியான கதைதான்.) அவருடைய எழுத்தை வெளியிடுவதால் தி.மு.க. கட்சிக்கும் ஆட்சிக்கும் பத்திரிகை அடிமைப் பட்டுவிட்டது என்று வாசகர்கள் நினைத்துவிடக்கூடாது என்பதாலும், உள்ளபடியே எடிட்டருக்கு அந்தக் கட்சியின் போக்குப் பிடிக்காததாலும், அதை விமரிசித்துத் தலையங்கமும் கார்ட்டூன்களும் வெளியிட்டுக் கொண்டிருந்தார்.

இதனால் கோபங்கொண்ட கலைஞர் தன் கதையை இனி வெளியிட வேண்டாம் என்று அறிக்கை விடுத்து எழுதுவதை நிறுத்திக் கொண்டுவிட்டார்.

அதன்பிறகு அவரைத் தாக்குவது முன்னிலும் சுலபமாகிவிட்டது எடிட்டருக்கு. முன்னைக் காட்டிலும் காரசாரமான தலையங்கங்களும் கார்ட்டூன்களும் வெளியிடத் தொடங்கினார். தி.மு.க.

ஆட்சியை விட்டு இறங்கியதில் ஒரு பெரும்பங்கு எடிட்டருக்கு உண்டு என்றுகூடச் சொல்லலாம்.

அவருடைய கட்சித் தொண்டர்கள், அலுவலகத்தில் முன் நின்று பத்திரிகைகளைக் கொளுத்தினார்கள் பெரிய பெரிய கல்லை எடுத்து வீசினார்கள். எடிட்டரின் அறை முன்பக்கம் இருந்ததால் ஒரு பெரிய கல், ஜன்னல் கண்ணாடியை உடைத்துக் கொண்டு எடிட்டரின் காலின் கீழே வந்து விழுந்தது.

'நீங்கள் வேறு பக்கமாகப் போய் இருங்கள்' என்று நாங்கள் சொல்லியும் 'பரவாயில்லை' என்று சொல்லிவிட்டு இடத்தைவிட்டு எழுந்திராமலே இருந்தார்.

கட்டிடத்தின் கேட்டில் ஒரு பக்கம் 'தேவி பிரஸ்' என்ற பெரிய பித்தளைப் பலகையும் இன்னொரு பக்கம் 'குமுதம்' என்ற பெரிய பித்தளைப் பலகையும் பொருத்தப்பட்டிருந்தன. ஆர்ப்பாட்டக் காரர்கள் சுவரை இடித்து அந்தப் பலகையைப் பெயர்த்து எடுத்துக் கொண்டு போய்விட்டார்கள்.

'வேறு போர்டு வைத்துவிடலாம்' என்று நாங்கள் சொன்னோம். "வேண்டாம்... அப்படியே இருக்கட்டும். நம் பத்திரிகைக்குப் போர்டு வைத்துத்தான் பெயர் வரவேண்டும் என்ற தேவை இல்லை" என சொல்லி விட்டார். பெயர்த்த இடத்தை சிமெண்ட் பூசி அடைத்தோம். இதை எழுதும்வரையில் 'குமுதம்' என்ற போர்டு வாசலில் இல்லாமலே இருக்கிறது.

♦

சுஜாதாவின் வெளுப்பு கறுப்பு சிவப்பு தொடர்கதை, ஆரம்பித்த மூன்று நான்கு வாரங்களுக்குள் நெருக்கடியைச் சந்திக்க நேரிட்டது.

அதில் இருந்த சில வரிகள் தங்களை இழிவு படுத்தும் விதமாக இருக்கிறதென்று ஒரு சமூகத்தினர் எண்ணினார்கள். அப்படி அவர்கள் நினைப்பதாக ஓர் எழுத்தாள நண்பர் எனக்கு போன் செய்து தெரிவித்த மறுநாளே, அந்தச் சமூகத்தைச் சேர்ந்த செல்வாக்கு படைத்த பெரியவர்கள் சர்சர் சர்ரென்று கார்களில் வந்திறங்கி, கடுமையான கண்டனத்தைத் தெரிவித்து விட்டுச் சென்றார்கள்.

நாங்கள் குழம்பி நின்றிருந்த சமயம், "கதையை நிறுத்திவிடுவோம்" என்றார் எடிட்டர் டக்கென்று.

"ஏன்... வருத்தம் தெரிவித்து ஒரு கட்டம் போட்டால் போதுமே...." என்று நான் இழுத்தேன்.

"இல்லை... இது சீரியஸான விஷயம். நீங்கள் சுஜாதாவுக்கு போன் போட்டுச் சொல்லுங்கள்..." என்று கூறிவிட்டு, அன்று மாலையும் மறுநாள் காலையும் தினசரிகளில் விளம்பரம் கொடுக்கவும் ஏற்பாடு செய்துவிட்டார் எடிட்டர்.

நான் பெங்களூருக்குப் போன் செய்து நிலைமையைச் சொல்ல, சுஜாதாவும் 'எடிட்டர் சொன்னால் தாராளமாய் நிறுத்திவிடுங்கள்' என்று கூறிவிட்டார்.

எனக்கு உள்ளூர வருத்தம். அது ஒரு நல்ல கதை என்பது மட்டுமல்ல, சுஜாதா பலவகைக் கதைகள் எழுதிவிட்டார் என்பதால், முதல் முறையாக

அவர் ஒரு சரித்திரக் கதை எழுத வேண்டும் என்று நான் விரும்பினேன். எடிட்டரிடமும் வற்புறுத்தி, சுஜாதாவிடமும் சொல்லி அதை எழுதச் செய்திருந்தேன். அவரும் அதற்காக மெனக்கெட்டு விவரங்கள் சேகரித்து வைத்திருந்தார்.

ஒரு மாதம் சென்ற பிறகு எடிட்டரிடம் மெதுவாக, "சுஜாதாவின் சரித்திரக் கதை... அது நல்ல கதை.... மறுபடி தொடரலாமே..." என்று இழுத்தேன்.

"வேறு தலைப்பில் ஆரம்பிப்போம்" என்றார். அந்தக் கதை வர வேண்டுமென்று விரும்பிக் கேட்ட வாசகர்களின் கடிதங்களை வெளியிட்ட பின்.

'ரத்தத்தின் நிறம் சிவப்பு' என்ற தலைப்புடன், அதே கதை, வேறு வடிவத்தில் மறுபடியும் முதல் அத்தியாயத்திலிருந்து ஆரம்பமாயிற்று.

இப்படி எந்தப் பிரச்னைக்கும் க்ஷண மாத்திரத்தில் அவரால் தீர்வு காண முடிந்ததென்றால் அதற்குக் காரணம், செய்யும் தொழிலே தெய்வம் என அவர் உளமார நம்பியதுதான். தான் அலுவல் பார்க்கும் அறையையே ஒரு கோயிலெனக் கருதினார் அவர். காலணியை அறைக்கு வெளியே விட்டுவிட்டுத் தான் உள்ளே செல்வார்... நாங்களும்தான். அவசரமாக அந்த அறையின் வழியே வெளியே செல்ல வேண்டியிருந்தால்கூடச் செருப்பைக் கழற்றிக் கையில் எடுத்துக்கொண்டு வெளியே வந்த பிறகுதான் மறுபடி மாட்டிக் கொள்வோம்.

# 8

வாசகர்களைக் கவரக்கூடிய சக்தி சினிமாவுக்கும் அரசியலுக்கும் அதிகம் உண்டு என்பதை எடிட்டர் உணர்ந்திருந்தார்.

எனவே வாரம் தவறாமல் சினிமா விமரிசனம் எழுதினார். எங்களை எழுத வைத்து, அவற்றை வெட்டிச் சரிசெய்து தன் அபிப்பிராயத்தையும் ஆங்காங்கே சேர்த்து, ஆணி அடித்தாற்போல் ஒரு கடைசி வரியை இணைத்துப் பிரசுரித்தார். யோகாசனப் பயிற்சி முதல் திருக்குறளின் சிறப்பு வரையில் எதையும் சினிமாக்காரர்கள் மூலம் சொன்னால் மக்களைச் சுலபமாகச் சென்றடையும் என்பதைப் புரிந்துகொண்டு, பரிகாசங்களைப் பொருட்படுத்தாமல் பல வகைகளில் அந்த உத்திகளைக் கையாண்டார். பழமைக்கு மதிப்புக் கொடுத்து, இளமைக்குச் சிம்மாதனம் தந்தார்.

அதே சமயம் ஒவ்வொன்றுக்கும் ஓர் அளவு உண்டு என்பதை அவர் மனசுக்குள் இருந்த தராசு காட்டிக்கொண்டேயிருக்கும். ஒரு வாரம், “நாம் என்ன சினிமா பத்திரிகையா? எதற்கு இவ்வளவு சினிமா சமாசாரங்கள்?” என்று வெட்டித் தள்ளுவார். இன்னொரு வாரம், “இதென்ன, பக்கம் பக்கமாய் ஓரே சகாராவாக இருக்கிறது? கண்ணுக்குக் குளிர்ச்சியாய் ஒரு ஸ்டில்லைக் காணோம்? படிக்கச் சுவாரஸ்யமாய் ஒரு செய்தியைக் காணோம்?” என்று கூறி, கிடப்பில்

போட்டிருந்த சினிமாப் படங்களையும் சினிமாத் துணுக்குகளையும் தேடியெடுத்து வரச்சொல்லி ஆங்காங்கே தூவுவார்.

'கிசுகிசு' என்ற வார்த்தையைக் கண்டு பிடித்துப் பிரபலப்படுத்தியவர் எடிட்டர்தான்... எல்லா வகையான ரகசியங்களும் அதில் வந்து கொண்டிருந்தன.

ஆனால், ஒரு நட்சத்திர தம்பதி ஒரு நாள் அவர் வீட்டுக்கே வந்துவிட்டார்கள். அந்த நடிகை தன் மானமே போய்விட்டது என்று சொல்லி, ஹோவென்று அழுதுவிட்டதும் எடிட்டர் ஆடிப் போய்விட்டார். அதன் பிறகு 'அவர் சண்டை போட்டார்... இவர் கால்ஷீட் தகராறு செய்தார்' என்பது போன்ற செய்திகள்தான் கிசுகிசுவில் வரலாமே தவிர, நடிகர் - நடிகைகளின் அந்தரங்க விஷயங்கள் வரக்கூடாது என்று சட்டம் போட்டார்.

எப்போதாவது நாங்கள் அந்த மாதிரி செய்தியை எடுத்துக்கொண்டு போய் அவரிடம் காட்டி, "இதைப் போடலாமே?" என்று சொன்னால், "உங்களுக் கென்ன, சொல்லிவிட்டுப் போய் விடுவீர்கள். ஒரு பெண் உங்கள் வீட்டுக்கு வந்து கண்ணீர் விட்டு அழுதால் தெரியும்!" என்று கோபிப்பார்.

நட்சத்திரங்களை வைத்து என்ன 'ஐடியா' ஆரம்பிக்கலாம் என்று அவர் மனம் ஆராய்ந்து கொண்டேயிருக்கும். 'ஹலோ' என்ற ஒரு பகுதியை ஒரு முறை ஆரம்பித்தார். நட்சத்திரத்தின் வீட்டு டெலிபோன் எண்ணைக் கொடுத்து, குறிப்பிட்ட

தினத்தில் குறிப்பிட்ட இரண்டு மணி நேரத்துக்குள் டயல் செய்தால் நட்சத்திரத்துடன் பேசலாம் என்ற பகுதி அது. யார் என்ன பேசினார்கள் என்பதைப் பற்றிப் பிறகு அந்த நட்சத்திரத்திடம் கேட்டுக் கட்டுரை வெளியிட்டோம். அந்த நேரத்தில் டெலிபோன் லயன்களில் 'ஜாம்' ஏற்பட்டுவிடுகிறது என்று டெலிபோன் இலாகாவினர் புகார் செய்யும் அளவுக்கு இந்தப் பகுதி வெற்றிகரமாக நடைபெற்றது.

அப்போது ஒரு சமயம், நடிகை லட்சுமியின் டெலிபோன் எண்ணுக்குப் பதில் வேறொரு எண் அச்சுப்பிழையாக மாறிப் பிரசுரமாகிவிட்டது. மறுநாள் லட்சுமி பேசவேண்டும். என்ன செய்வதென்று நாங்கள் கையைப் பிசைந்து கொண்டிருக்கையில், எடிட்டர் வழக்கம்போல் சட்டென்று ஒரு தீர்வு சொன்னார். தப்பாக வந்திருக்கும் எண் எதுவோ, அந்த எண்ணுள்ள வீட்டுக்காரரைச் சந்திக்கும்படி கூறினார். பிழைக்கு வருத்தம் தெரிவித்துவிட்டு, குறிப்பிட்ட நேரத்துக்கு லட்சுமி அங்கே வரலாமா என்று கேட்கும்படி சொன்னார். அதன்படியே செய்தோம். அவர்களுக்கு ஒரே மகிழ்ச்சி - லட்சுமி தங்கள் வீட்டுக்கு வருகிறார் என்று. பிறகு லட்சுமியிடம் விஷயத்தை விளக்கி அந்த வீட்டுக்கு அழைத்துச் சென்று ரசிகர்களுடன் பேச வைத்தோம்.

பம்பாய் ஃபிலிம்ஃபேர் பத்திரிகையில் நட்சத்திரங்களை நேரில் பார்த்துப் பேசி, அவர்களுடைய பழக்கவழக்கங்களைப் பற்றி சரளமான நடையில் ஒரு கட்டுரை தொடர்ந்து வந்து கொண்டிருந்தது. அந்த மாதிரி ஒன்று எழுத வேண்டும் என்று ரொம்ப நாளாகச் சொல்லிக் கொண்டிருந்தேன்

எடிட்டரிடம். அவரும் பார்க்கலாம் என்று சொல்லிக் கொண்டேயிருந்தார்.

அதற்கொரு சந்தர்ப்பம் வந்தது.

பத்திரிகையின் அலுவல்களிலிருந்து கொஞ்ச காலம் ஒதுங்கியிருந்தார் எடிட்டர். தலையங்கம், கார்ட்டூன், அரசு பதில் முதலிய சில விஷயங்களைத் தவிர மற்ற அனைத்தையும் எங்கள் பொறுப்பில் விட்டு விட்டார். என்ன வருகிறதென்று ப்ரூஃப்பை மட்டும் பார்வையிட்டார். நாங்களும் எங்களுக்குத் தோன்றியபடி சில புதிய பகுதிகளை ஆரம்பித்தோம்.

அவற்றில் ஒன்றுதான் 'லைட்ஸ் ஆன்'.

நிருபரை அனுப்பிச் சில நட்சத்திரங்களைப் பேட்டி கண்டு விஷயம் கொண்டு வருமாறு சொல்லி, அதை ஒரு திருகலான நடையில் எழுதி, படாடோபமாகச் சில ஆங்கில வார்த்தைகளையும் தெளித்தேன். 'வினோத்' என்று பெயர் வைத்துக் கொண்டேன்.

எடிட்டருக்கு ப்ரூஃப் போயிற்று. என்ன சொல்லப் போகிறாரோ என்று காத்திருந்தேன். டெலிபோனில் கூப்பிட்டார்.

"வினோத் என்று ஒருத்தர் கட்டுரை எழுதி யிருக்கிறாரே, யார் அவர்?" என்று கேட்டார்.

"ஏன்... அது..." என்று தயங்கினேன்.

"யார்? சொல்லுங்கள்..." என்றார் மறுபடியும்.
"வந்து... நான்தான்..." என்றேன்.

"ப்பூ! அவ்வளவுதானா!" என்றார் எடிட்டர். எனக்கு முதலில் புரியவில்லை. தொடர்ந்து, "யாரோ ஒரு புது எழுத்தாளரை நீங்கள் கண்டுபிடித்து அறிமுகப்படுத்தியிருக்கிறீர்கள் என்று சந்தோஷப் பட்டேன். கடைசியில் நீங்கள்தானா அதுவும்!" என்றார். முதுகில் தட்டின மாதிரியும் இருந்தது... தலையில் குட்டின மாதிரியும் இருந்தது.

எந்தப் பகுதிக்காவாவது நான் உயிரை விட்டேன் என்றால் அது இந்த 'லைட்ஸ் ஆன்' பகுதிக்குத்தான். எழுதுவதற்கு நான் இப்படிக் கஷ்டப்பட்டது ஒருபுறம் என்றால், இன்னொருபுறம் அதைக் கண்கொத்திப் பாம்பாகக் கண்காணிப்பார் எடிட்டர்.

அந்த இரண்டு பக்கத்தை அவர் பார்த்து ஓகே செய்வதற்குள் எனக்கு உயிர் போய் உயிர் வந்துவிடும். சில சமயங்களில் எதற்காக அப்படியாவது 'லைட்ஸ் ஆன்' எழுத வேண்டுமென்று மனம் நொந்தது கூட உண்டு.

மக்களுக்கு மிகுந்த ஈடுபாடு உள்ள இன்னொரு சக்தி அரசியல் என்பது எடிட்டருக்குத் தெரிந்திருந்தது. தலைவர்களின் சொற்பொழிவுகளிலும் வாழ்க்கையிலும் என்னென்ன சுவாரஸ்யமான தகவல்கள் கிடைக்கின்றனவோ அதையெல்லாம் துணுக்காகவோ, கட்டுரையாகவோ, படமாகவோ பிரசுரித்தார். அறிஞர் அண்ணா அமெரிக்காவில் சிகிச்சை பெற்று வந்த சமயம்.... அங்கே இருந்த அழகப்பன் என்ற உறவினரின் உதவியுடன், அண்ணாவின் உடல்நிலை, டாக்டர்களின் கருத்து, பேட்டிகள், பொழுதுபோக்குகள் முதலிய தகவல்களை

அங்கே அண்ணாவுடன் இருந்த அன்பழகன், ராசாராம் ஆகியோரின் வாயிலாகத் தெரிந்து கொண்டு, பெரிய பெரிய படங்களுடன் சிறப்பு இணைப்பாக வழங்கினார். அந்த இணைப்பு நொடியில் பறந்துவிடவே, இன்னொரு பதிப்பும் வெளியிட்டார்.

தலையங்கமும் கார்ட்டூனும் எடிட்டரின் தனிச் சிறப்பாக விளங்கின.

திங்கட்கிழமை காலைகளில் பேப்பர்களைப் பார்த்து, சுவையான விஷயங்களைக் குறித்து வைத்துக் கொண்டு எடிட்டரிடம் சொல்ல வேண்டியது என் வேலை. பதினைந்து நிமிஷத்தில் பதினைந்து வரிகளில் தலையங்கத்தை எழுதி முடித்துவிடுவார்.

ஆனால், கார்ட்டூன் பற்றிய விவாதம் மணிக்கணக்கில் நீளும். நினைத்து நினைத்துச் சிரிக்கக் கூடிய, ரசிக்கக்கூடிய நேரங்கள் அவை.

அரசியல் சூழ்நிலை ரொம்பச் சூடாகவும் சுவாரஸ்யமாகவும் இருந்த கட்டத்தில், இரண்டு பக்கத்தில் நான்கு கார்ட்டூன்கள் வெளியிட்டோம். ஒவ்வொரு கார்ட்டூனிலும் படம் எப்படி இருக்க வேண்டும் என்பதை நடித்துக் காட்டி விளக்குவார் எடிட்டர். சி. சுப்பிரமணியம் தலையில் கைவைத்துக் கொண்டு உட்கார்ந்திருக்கிற கார்ட்டூன் என்றால், தானே தரையில் அப்படி உட்கார்ந்து காட்டுவார். அதை அப்படியே காட்டூனிஸ்ட் வாசுவிடம் சொல்ல வேண்டும்.

சில சமயம் எங்களையும் நடிக்க வைப்பார். மொரார்ஜி தேசாயின் கழுத்தை ஜெகஜீவன்ராம்

நெரிக்கிற மாதிரி கார்ட்டூன் போட வேண்டு மென்றால், சுந்தரேசன் தரையில் படுத்துக் கிடப்பார். புனிதன் அவர் மார்பு மீது ஏறி உட்கார்ந்து கொண்டு கழுத்தை நெரிப்பார். சுந்தரேசன் கைகாலைத் தூக்கி, நாக்குப் பிதுங்கி, 'பே' என்று அலறுகிற மாதிரி நடித்துக் காட்டுவார். இதை நான் நன்கு கவனித்துப் பார்த்து, அதே பாவம், அதே 'போஸ்' வெளிப்படுகிற மாதிரி கார்ட்டூன்காரரிடம் விளக்க வேண்டும்.

அந்தச் சமயத்தில் யாரேனும் எடிட்டரின் அறைக் கதவைத் திறந்து எட்டிப் பார்த்திருந்தால், "இது என்ன, பத்திரிகை ஆபீஸா, பைத்தியக்கார ஆஸ்பத்திரியா!" என்று திகைத்துப் போயிருப்பார்!

# 9

எடிட்டருக்கு சங்கீதத்தில் ஈடுபாடு உண்டு. கானாடுகாத்தானில் உள்ள அவருடைய பங்களாவில் வீணை காரைக்குடி சாம்பசிவ ஐயர் சில காலம் தங்கியிருந்ததைப் பெருமையுடன் பலமுறை சொல்லி யிருக்கிறார்.

ஒரு வேலை திருப்திகரமாக முடிந்துவிட்டால் உற்சாகமாக, சன்னமான குரலில் பாடுவது எடிட்டரின் வழக்கம்.

'கண்டவுடன் என் உள்ளம் கொள்ளை கொண்ட கள்வா...' என்ற பழைய சினிமாப் பாட்டு அவருக்கு ரொம்பப் பிடிக்கும். அதை 'ஹம்' செய்துவிட்டு, 'இது ஸஹானா ராகம்தானே...? நீங்கள் தொடர்ந்து ஆலாபனை பண்ணுங்கள்' என்று சுந்தரேசனிடம் சொல்வார்.

சுந்தரேசன் முறையாகக் கர்னாடக சங்கீதம் பயின்று, ஓர் அரங்கேற்றமும் நடத்தினார். எடிட்டர் அதற்குச் சென்றிருந்தார். 'நாமும் சங்கீதம் கற்றுக் கொண்டால் என்ன?' என்று ஆசை ஏற்பட்டது போலும். ஒரு பாட்டு வாத்தியாரை அமர்த்தி, ஹார்மோனியம் வாங்கி வைத்துக்கொண்டு பயில ஆரம்பித்தார். ஆனால், 'ஸ்ரீ கணநாத' கீதத்தில் 'லம்போதரா'வுக்குமேல் போகவில்லை. தன் பத்திரிகைக் கடமைகளுக்கும் சங்கீதப் பயிற்சிக்கும்

சரிப்பட்டு வராது என்று தெரிந்ததும், ஹார்மோனியப் பெட்டியை ஓரமாக வைத்துவிட்டார்.

எடிட்டருக்குப் பெரும் ஆர்வமுள்ள இன்னொரு விஷயம் - மேடைப் பேச்சு. நான் வேலைக்குச் சேர்ந்த புதிதில், எடிட்டரும் அவருடைய நண்பர்களும் எடிட்டருடைய இல்லத்தின் மாடியில் நடத்திய 'டிபேட்'களில் நானும் கலந்து கொண்டதுண்டு. கம்யூனிஸ்ட்டுகள் எது செய்தாலும் சரிதான் என்கிற ரீதியில் நான் பேசுவேன். எடிட்டர் சோஷலிஸவாதி. என் பேச்சை எதிர்த்துப் பேசுவார். பிற்காலத்தில் நண்பர்களிடம் 'நான் எவ்வளவு மென்மையாக, நிதானமாகப் பேசிக் கொண்டிருந்தவன்! இந்த ரங்கராஜன் என்னைக் கத்த வைத்துக் கத்த வைத்து, என் தொண்டையை இப்படிப் பெரிது பண்ணிவிட்டார்' என்று சொல்வதுண்டு.

எங்களுக்கும் பேச்சுப் பயிற்சி கொடுத்தார் கொஞ்ச நாளைக்கு. ஏதாவது ஒரு தலைப்புக் கொடுத்து, யோசிப்பதற்கு ஐந்து நிமிடம் டைம் கொடுத்து, பத்து நிமிடம் பேசச் சொல்வார். பேனா, பென்சில் என்று சிறு பரிசுகள் வழங்குவார். ஒரு சொற்பொழிவு எப்படி அமைய வேண்டும், அதில் என்னென்ன அம்சங்கள், எங்கெங்கே இடம் பெறவேண்டும் என்று குறிப்புகள் கொடுப்பார்.

விவேகானந்தரின் நூற்றாண்டு விழாக் கூட்டங்களுக்காகப் பல ஊர்களுக்குப் பேசச் சென்றார். 'மிகச் சிறந்த பேச்சாளர்' என்று பெயர் வாங்கியிருந்த சமயம் -

திடீரென்று ஒரு நாள், "இனிமேல் மேடைப் பேச்சுக்குப் போகப் போவதில்லை..." என்று என்னிடம் கூறினார்.

"ஏன்.... என்ன நடந்தது...?" என்றேன்.

"ஒன்றும் நடக்கவில்லை. மேடைப் பேச்சு என் தொழிலல்ல... ஆனால், அதிலேயே புத்தி போகிறது. பத்திரிகைதான் என் சுதர்மம்..." என்று கண்டிப்புடன் சொல்லிவிட்டார். அவரைப் பேசுவதற்கு அழைப்பவர்களிடம் 'அவர் வரமாட்டார்' என்று சொல்லும் கசப்பான பொறுப்பு எனக்கு வந்தது. ஏதோ நான்தான் குறுக்கே நின்று தடுக்கிறேன் என்று நினைத்தவர்களும் உண்டு.

அவர் காட்டிய வழியில் நடந்ததால், நாங்களும் சிற்சில கட்டுப்பாடுகளுக்கு உட்பட நேரிட்டதுண்டு. '69-ம் ஆண்டு அமெரிக்க அரசிடமிருந்து நாற்பது நாள் அமெரிக்காவில் பயணம் செய்ய வரும்படி எனக்கு அழைப்பு வந்தது. 'ஒப்புக் கொள்ளுங்கள்' என்று எடிட்டர் சொல்லவே, ஒப்புக் கொண்டேன். பயணத் திட்டம், டிக்கெட் எல்லாம் அவர்கள் 'ரெடி' பண்ணி வைத்திருந்தபோது, இந்தியா - பாகிஸ்தான் யுத்தம் மூண்டது. ஜனாதிபதி நிக்சன் பாகிஸ்தானைத் தீவிரமாக ஆதரித்து, இந்தியர்களின் வெறுப்பைத் தேடிக்கொண்டார்.

"இப்போது நீங்கள் அமெரிக்கா சென்றால் எல்லோருக்கும் நம் பத்திரிகைமேல் வெறுப்பு வரும். எனக்கே உங்களைப் பார்க்க வெறுப்பாகிவிடும். ஆகவே போக வேண்டாம்...." என்று தடுத்துவிட்டார் எடிட்டர்.

சுந்தரேசன் மதுரைப் பல்கலைக்கழகத்தில் அஞ்சல்வழிப் பட்டப் படிப்புக்காகத் தீவிரமாகப் படித்துக் கொண்டிருந்தார். 'பட்டமா, பத்தரிகையா?

தீர்மானித்துக் கொள்ளுங்கள்' என்று எடிட்டர் ஒரு நாள் அதட்டல் போடவே, சுந்தரேசன் அஞ்சல் வழிக்குக் கும்பிடு போட்டுவிட்டார்.

எடிட்டர் கடைப்பிடித்த நெறியும், அவர் செய்த தியாகமும் அவர் சொல்லிக் கொடுத்த தர்மமும் - அவர் கிழித்த கோட்டைத் தாண்டாதவாறு எங்களைக் கட்டி வைத்திருந்தன. ஆனால், என்னதான் சின்னச் சின்ன ஏமாற்றங்களும் வருத்தங்களும் நேரிட்ட போதிலும் -

நான் உடல்நிலை சரியில்லாமல் இருந்த சமயங்களில் எடிட்டர் என்னை ஆஸ்பத்திரியில் வந்து பார்த்ததும், அமெரிக்காவிலிருந்து மருந்து வாங்கிவந்து தந்ததும், எனக்காக நாள்பூரா ம்ருத்யுஞ்சய ஜபம் செய்ததும், என் பொருட்டு வளசரவாக்கம் ஆஞ்சநேயர் கோயிலில் மட்டைத் தேங்காய் கட்டி வேண்டுதல் செய்து கொண்டதும்தான் என் நினைவில் ஆழமாக நிற்கின்றன.

**பி**றப்பினால் எடிட்டர் நகரத்தாரே தவிர, செட்டி நாட்டுக்காரர்களையும் உறவினர்களையும் அருகில் அண்ட விட்டது கிடையாது. கௌரவ ஆசிரியர் அழகப்ப செட்டியாரின் நினைவு நாளன்று, அவரது குணநலன்களைப் போற்றி ஒரு கட்டுரை வெளிவரும். அப்போது சில சமயம், வேறு வழியில்லாமல் உறவினர்களின் பேட்டியை வெளியிடுவார். மறறப்படி உறவினர்கள் என்றாலே அவருக்கு அலர்ஜி.

'அன்றாடம் தான் சந்திக்கும் நபர்களைப் பற்றிக் கண்ணதாசன் எழுதினால் நன்றாயிருக்கும்'

என்று எடிட்டர் ஒருமுறை சொல்ல, நான் கண்ணதாசனிடம் தெரிவிக்க, அவரும் உடனே ஒப்புக் கொண்டார். அதற்கு எடிட்டரிடம் அவருக்கிருந்த மதிப்பு ஒரு காரணம். என்னிடம் அவருக்கிருந்த பிரியம் இன்னொரு காரணம் (சக்தி பத்திரிகையில் நாங்கள் இருவரும் சேர்ந்து வாழ்க்கையை ஆரம்பித்து, சேர்ந்து சாப்பாட்டுக்குத் திண்டாடியதுண்டு. போனில் கூப்பிட்டால், 'என்னடா ரங்கா?' என்றுதான் என்னிடம் பேசுவார். என்னை 'டா' போட்டுக் கூப்பிட்ட நண்பரும் அவரே – 'ரங்கா' என்று கூப்பிட்டவரும் அவரே!).

கண்ணதாசன் எழுதியதோ பொதுவாக அவருக்குத் தெரிந்த பெரிய புள்ளிகளைப் பற்றிய கட்டுரைகளாகவே இருந்தன. (கவியரசு கடைசியாக எழுதிய கட்டுரைகளும் அவைதான்.)

எடிட்டர் ஒரு நாள் என்னைக் கூப்பிட்டு, "கண்ணதாசன் இதோடு மூன்று நாலு செட்டியார்களைப் பற்றி எழுதிவிட்டார்... இனி அவர்களைப் பற்றி எழுத வேண்டாமென்று சொல்லுங்கள்..." என்றார்.

கண்ணதாசனிடம் சொன்னதும், "ஐயையோ! என்னப்பா இது... இன்னும் ஐம்பத்திரண்டு செட்டியார்களைப் பற்றி எழுதுவதற்குக் கைவசம் குறிப்பு வைத்திருக்கிறேனே!" என்றார் சிரித்தபடி.

இதுபோன்ற தன்னின மறுப்பினாலும், தன்னல மறுப்பினாலும் எடிட்டருக்கு எவ்வளவோ தர்மசங்கடங்களும் கஷ்டங்களும் பிறரின் எதிர்ப்புகளும் மனவருத்தங்களும் ஏற்பட்டிருக்கும்.

வெளியே தெரிந்தது கொஞ்சமே.... ஆனால், கடைசி மூச்சு உள்ளவரையில் அவற்றைப் பொருட் படுத்தாமல், ஒரு சந்தோஷமான போராட்டமாக வாழ்க்கையை நடத்தினார் அவர். ஆகவே, அவருக்கு மிகவும் பிடித்தமான கீதை சுலோகத்துடனேயே முடித்துக் கொள்கிறேன்.

கீதை இரண்டாவது அத்தியாயத்தில், முப்பத் தெட்டாவது சுலோகமான இது - கண்ணனால் காண்டீபனுக்குச் சொல்லப்பட்டது:

'இன்பம் - துன்பம். லாபம் - நஷ்டம். வெற்றி - தோல்வி ஆகியவற்றைச் சமனாகக் கருதிப் போரில் முனைக. அதனால் நீ பாவம் அடையமாட்டாய்...'

# எனக்குத் தெரிந்த ஜனக மகாராஜா!

ஐ. ரா. சுந்தரேசன்

## 1

'குமுதமா? வீட்டுக்குள் பார்த்தால் தொலைத்து விடுவேன்' என்று ஐம்பதுகளிலும் அறுபதுகளிலும் இளம் உள்ளங்களுக்குப் பெற்றோர் போட்ட தடையினூடே, அதுவே அதை வளர்க்கும் உரமாக அமைந்து, வாலிபர்களின் உள்ளங்களையும் யுவதிகளின் மனங்களையும் கொள்ளை கொள்ளக் காரணமாயிற்று.

கதை என்றால் குறிப்பிட்ட சமூகத்தவர் பற்றியும், நடுத்தர வர்க்கத்து அல்லது வறுமையைச் சித்திரித்து எழுதுபவைகளாகவும் இருந்த கால கட்டத்தில், மேல் தட்டு மக்களின் வாழ்க்கை முறையைத் தனது தொடர்கதைகள் மூலம் அறிமுகப் படுத்தியவர் ஆசிரியர் எஸ். ஏ. பி. அவர்கள்.

சந்தேகமில்லாமல் அது பணக்காரப் பத்திரிகை. கோடீசுவரர் அழகப்ப வள்ளலைக் கௌரவ ஆசிரியராகக் கொண்டு ஒரு கோடீசுவர இளைஞரால் 1947-இல் துவக்கப்பட்டு வெகு சீக்கிரமே இளம் பருவத்தினரின் போதையாயிற்று.

'வாழ்க்கையில்தான் தரித்திரமும், போராட்டமும், சாதியும் சழக்குமென்றால் கதைகளிலும் அதுவே தானா?' என்று சலித்துக் கொண்டிருந்த சமயம், பழமைக்கு நடுவே பாண்ட் போட்ட வாலிபனாகக் குமுதம் மலர்ந்தது வாசகர்களுக்கு ஒரு நல்ல மாறுதலான விருந்தாக அமைந்தது. வெகு சீக்கிரமே உன்னத வளர்ச்சியை அடைந்தது.

ஒரு சந்திரகுப்தனுக்குச் சாணக்கியர் கிடைத்தாற்போல் குமுதம் ஆசிரியருக்கு அவரது கல்லூரி நண்பர் திரு. பார்த்தசாரதி அமைந்தார். ஆசிரியர் ராமர் என்றால் பிரசுரத்தர் பார்த்தசாரதி லட்சுமணன். ஆசிரியரின் எந்தக் கட்டளைக்கும் அவர் மறு பேச்சுப் பேசியதை நாற்பதாண்டு காலக் குமுதத் தொடர்பில் நான் கண்டதில்லை. நெருப்பிலே குதி என்றால் கூடக் குதித்துவிடுவார்.

உன்னத பக்திமானான பிரசுரகர்த்தர் ஆசிரியருக்குக் கிடைத்ததும், சுவாமி சின்மயாவின் பிரசங்கத்தைக் கேட்கும்படி நேர்ந்ததுமே ஆசிரியரைச் சிறந்த ஆன்மிகவாதியாகவும் வெற்றிகரமான பத்திரிகை ஆசிரியராகவும் மாற்றிவிட்டன.

ஆசிரியர் எஸ்.ஏ.பி. அவர்கள் எல்லாவற்றையும் அறிவுக் கண்கொண்டு நுட்பமாகப் பார்த்து, தன் அறிவு ஒப்புக் கொண்டதையே ஏற்கும், அகத்தே

பிடிவாதமான, ஆனால் புறத்தே சாதுவான இளைஞராக இருந்து வந்தார்.

அறிஞர்களையும் பெரியவர்களையும் மதிக்கும் பண்பு ஆசிரியரிடம் இருந்தது போல் யாரிடமும் நான் கண்டதில்லை.

பிரசுரகர்த்தரின் தந்தையிடம் ஆசிரியருக்கு அளவு கடந்த மரியாதை, பாசம், பக்தி. அவர்தான் ஒரு நாள் ஆசிரியரின் வீட்டுக்கு வந்து சுவாமி சின்மயானந்தா உபந்நியாசத்துக்கு அவரை அழைத்துச் சென்றார்.

சுவாமி சின்மயாவின் அணுகு முறையும், பேச்சாற்றலும் ஆசிரியரின் வாழ்க்கையில் திருப்பு முனையாக அமைந்தன. ஒரு நல்ல பகுத்தறிவு வாதியாகவும் தேசியவாதியாகவும் இருந்தவரை ஒரு மிக நல்ல ஆன்மிகவாதியாகவும் மாற்றிவிட்டன. கீதையில் ஈடுபாடும், கீதை கூறிய வழியை அப்படியே கடைப் பிடிப்பவராகவும் இறுதிவரை ஆசிரியர் வாழ்ந்து காட்டினார்.

'எல்லாம் ஆண்டவன் செயல்' என்பது ஆசிரியர் அடிக்கடி கூறும் வாக்கியம்.

'பிறரிடம் குற்றம் காண்பதற்கு முன், தான் சுத்தமாக இருக்க வேண்டும்' என்பதைக் கடைப் பிடித்தவர். குமுதத்தில் 'என் அருமைத் தமிழ் மொழியே' என்று ஒரு புகைப்படப் பகுதி அப்போது வெளிவந்து கொண்டிருந்தது. பொது இடங்களில் தப்பும் தவறுமாகத் தமிழ் அறிவிப்புகள் எங்கு எழுதப்

பட்டிருந்தாலும் அதைப் புகைப்படம் எடுத்து வெளியிடும்.

ஊட்டியில் ஒரு பூங்காவில் அறிவிப்புப் பலகையில் 'பூக்களைப் பறிக்கதீர்' என்று கால் விட்டுப் போயிருந்ததை ஒரு வாசகர் புகைப்படம் எடுத்து அனுப்பியிருந்தார். அதைப் பிரசுரிக்கும்போது நாங்களே ஒரு அச்சுப் பிழை செய்து விட்டோம். ஒன்றல்ல, மூன்று. அதுவும் ஒரே வார்த்தையில் மூன்று பிழைகள். டு இன் ஒன் போலத் த்ரீ இன் ஒன்!

'ஊட்டியிலுள்ள யூங்கர்வில் இப்படி ஒரு அறிவுப்பு உள்ளது' என்று அச்சாகிவிட்டது. 'பூங்காவில்' என்பதற்கு 'யூங்கர்வில்' என்று அச்சாகி விட்டது. 'அறிவிப்பு' 'அறிவுப்பு' ஆகிவிட்டது.

'அவர்கள் செய்தது ஓர் அச்சுப்பிழை. அதைச் சுட்டிக்காட்டிய நாம் மூன்று அச்சுப் பிழையல்லவா செய்து விட்டோம்' என்று அந்தப் பகுதியையே அடுத்த இதழிலிருந்து நிறுத்திவிடச் சொல்லிவிட்டார்.

ஆசிரியர் அவர்களுடன் மணிக்கணக்கில் ஆன்மிகப் பேச்சு பேசுவேன். மயிலாப்பூரில் கீதை வகுப்பு முடிந்து புரசைவாக்கம் வரும் வரையில் ஆழ்ந்த ஆன்மிகம் அலசப்படும். அரவிந்தரின் யோகம், உபநிஷத்துக்களின் சாரம், கீதைத் தத்துவம், பரஸ்பரம் ஏற்பட்ட சொந்த ஆன்மிக அனுபவங்கள். இரவு பத்தரைகூட ஆகிவிடும். அப்போது நான் பிரம்மசாரி.

ஆனந்தவிகடன் பொறுப்பாசிரியராக இருந்த தேவன் அவர்கள் காலமான தினம் — 1958-ஆம் ஆண்டு என்று ஞாபகம்.

அன்று ஆசிரியரின் பங்களாவில் எங்களது சாதனைத் தினம் அனுஷ்டித்துக் கொண்டிருந்த நேரம்.

கீதை படித்தல், பஜனை, விவாதம், தியானம் மனன ஜபம், லிக் ஜபம் (ஜபம் எழுதுதல்) இப்படி முறையாக அந்தச் சாதனைத் தினத்தில் நிகழ்ச்சி நிரல் போட்டுக் கொண்டு நடத்திக் கொண்டிருந்தோம். மௌனம்தான். பஜனை, விவாதம் தவிர மீதி நேரத்தில் யாரும் எதுவும் பேசுவதில்லை.

கடைசிக் கட்டமாக 'லிக்' ஜபம்; அவரவர் அவரவருக்குப் பிடித்த நாமத்தை எழுதிக் கொண்டிருந் தோம். ஆசிரியர் எப்போதும் 'ஓம் முருகா' தான் எழுதுவார்.

லிக் ஜெபம் எழுதிக் கொண்டிருந்தபோது டெலிபோன் அடித்தது. பிரசுரகர்த்தர் எடுத்தார். "தேவன் பாஸ்டு எவேயாமே" என்றார். அவர் பேசியது அவ்வளவே. மற்றவர்கள் (பிரசுரகர்த்தர் உட்பட) அவரவர் மீண்டும் ஜெபம் எழுதத் தொடங்கினார்கள். ஆசிரியரவர்கள் 'நான் போயிட்டு வந்துடறேன்' என்று சொல்லி, தேவனுக்கு இறுதி மரியாதை செலுத்த வகுப்பிலிருந்து உடனே எழுந்து சென்றுவிட்டார்.

ஜெபம் முடிக்காமல் சாதனை வகுப்பு முடிவதற்கில்லை. ஆகவே தொடர்ந்து மற்றவர்கள் எழுதிக் கொண்டிருந்தோம்.

நான் 'ஓம் நமோ நாராயணா, ஓம் நமோ நாராயணா' என்று எழுதிக் கொண்டிருந்தவன் மிகவும் மன நெகிழ்ச்சி பெற்றவனானேன்.

'தேவன் எவ்வளவு பெரிய புகழ் பெற்ற எழுத்தாளர்! அவரும் ஒரு நாள் மரணம்தானே

அடைந்தார்! அந்தப் புகழுக்கும், பெயருக்கும் கடைசியில் மரணம்தான் நிச்சயம் போலும்....' என்று ஒரு விரக்தி என்னைச் சட்டென்று பிடித்தது.

'இளமை அநித்யம், மரணமே நிச்சயம்' என்று தொடர்ந்து ஏழெட்டுத் தடவை எழுதிவிட்டு, அந்தக் கணமே துறவியாவது என்று தீர்மானித்தேன்.

பேனாவைக் கீழே வைத்துவிட்டு எழுந்து கொண்டேன். யாரிடமும் எதுவும் சொல்லவில்லை. யாரிடம் யார் விடை பெறுவது?

நேராக சென்டிரல் ஸ்டேஷன் போனேன். என் முன் டிக்கெட் கௌண்டரில் நின்றிருந்தவர். 'ஷோரனூர்' என்றார். நானும் ஷோரனூருக்கு ஒரு டிக்கெட் வாங்கிப் புறப்பட்டேன்.

ஷோரனூர் சென்று அங்கிருந்து குருவாயூர் போய்க் காவி உடைக்கு மாறிச் சந்நியாசி ஆகிவிட்டது. (ஆகி விட்டதாக நினைத்துக் கொண்டேன்.)

மூன்று நான்கு நாட்களுக்குப் பின் அந்தப் பக்குவம் எனக்கு வரவில்லை என்பதை உணர்ந்து, என் மூத்த சகோதரருக்கு ஒரு கடிதம் எழுதிப் போட்டு, அவர் புறப்பட்டு வந்து என்னைச் சென்னைக்கு அழைத்து வந்துவிட்டார்.

ஒரு வாரம் கழித்து ஆசிரியர் முன்னால் நான் நின்றேன். அவர் பேசவில்லை. ஒரு நாள், இரண்டு நாள், மூன்று நாள், ஒரு வாரம் பேசவில்லை.

அவருக்கு வந்த ஓரே கோபம் அதுதான்.

"படத்துக்கு நீங்கள் கதை எழுதித் தர வேண்டும் என்று சொல்லியிருந்தது. காலையில் பாரம் ஓடணும். நீங்கள் எல்லாவற்றையும் தூக்கிப் போட்டு விட்டுச் சந்நியாசியாகப் போய்விட்டால் என்ன

நியாயம்? கடமையைத் தூக்கி எறிந்துவிட்டுப் போகிறவன் துறவியல்ல. துறவியாக முடியாது" என்று கண்டித்தார்.

நானும் எனது செய்கைக்கு வருத்தப்பட்டேன். ஆனால் அவரே மற்றவர்களிடம் என்னைப் பற்றிப் பெருமையாகவும் கூறுவார். "நம்மள்ளே அவர் ஒருத்தருக்குத்தானே அந்தத் துணிச்சல் வந்தது? அந்தப் பாக்கியம் கிடைத்தது?" என்று உயர்த்திச் சொல்வார்.

துறந்து விடுவதால் மட்டுமே ஒருவன் சந்நியாசியாகி விடமாட்டான். எவன் தனது காரியங்களை - தனக்கு ஸ்வதர்மமாக அமைந்துள்ள கர்மங்களைப் பற்றின்றிச் செய்கிறானோ, அவன் காரியம் செய்தாலும் செய்யாதவனே, அவனே யோகி' என்ற உயர்ந்த த்துவத்தை ஆசிரியர் எனக்குப் போதித்தார். தாமும் அதையே கடைப்பிடித்தார்.

குமுதம் பத்திரிகையின் ஆசிரியர் என்ற தமது ஸ்வதர்மத்தை அவர் சிறப்பாகச் செய்தார்.

'ஜனக மகாராஜா போல' என்று வேதாந்திகள் ஜனகரை உதாரணம் காட்டுவார்கள். எந்தப் பதவியிலிருந்தாலும் பற்றின்றிப் பணியாற்றுபவர் களுக்கு ஜனகர் அந்தக் கால உதாரணம்.

இந்தக் காலத்துக்கு மார்க்அரேலியரும், திலக் முனியும், காந்தி அடிகளும், அவர்களது வழியைப் பின்பற்றி நடந்த பல கர்ம யோகிகளையும் நாம் பார்த்தோம். அந்த வரிசையில் எனக்குத் தெரிந்த ஜனக மகாராஜா 'குமுதம்' ஆசிரியர் அமரர் எஸ்.ஏ.பி. அவர்களே.

**நன்றி : கலைமகள்**

# 2

தாய்க் குலத்தைப் பற்றி உன்னதமான மதிப்புக் கொண்டவர் ஆசிரியர் எஸ்.ஏ.பி. கோடீஸ்வரராக இருந்தும், அவரிடம் எந்தவிதமான கெடுதலான பழக்கங்களும் இருந்ததில்லை.

அவரது நாலு முழக் கதர் வேட்டியும், கதர் சட்டையும், அடக்கமும், துறவுத் தன்மையும், குமுதம் அலுவலகத்திலிருந்த ஊழியர்களுக்கு ஒரு வகையில் இம்சையாக இருந்தது என்று கூடச் சொல்லலாம்.

தங்களை மிடுக்காக அலங்கரித்துக் கொண்டு 'டாக் டாக்'கென்று 'ஷூ' சத்தம் ஒலிக்க அலுவலகத்தில் ஒரு பிள்ளை நடந்தது இல்லை. பத்திரிகையோ இளம் பெண்களையும், இளைஞர் களையும் பிடித்து இழுக்கும் வண்ணங்களையும், படங்களையும், கதைகளையும் கொண்டதாக இருந்தது. நடைமுறையிலோ ஒரு பெண் கொசு கூட, குமுதம் அலுவலகத்தில் நுழையலாகாது என்ற கறாரான விதி.

அப்படியும் தப்பித் தவறி எந்தப் பெண் சமூகத் தொண்டரோ, முன் அறிவிப்புத் தராமல் திடீரென்று பார்க்க வரும் பெண் பிரமுகரோ, ஆங்கிலப் புத்தக நிறுவனங்களிலிருந்து ஐயாயிரம், பத்தாயிரத்துக்கு நூல்களைத் தலையில் கட்ட முயற்சி செய்து கொண்டு, வாய் நிறைந்த ஆங்கிலத்துடன் வரும் விற்பனைப்

பிரதிநிதியோ (பெண்) வந்து ஹாலில் 'ராபணா' என்று ஸ்டைலாகக் கால் மேல் கால் போட்டுக் கொண்டு உட்கார்ந்து விடுவார்கள். சில பெண்மணிகள் நடன அரங்கேற்றம் செய்த தங்கள் குழந்தையின் புகைப்பட ஆல்பத்துடன்!

அந்த மாதிரி சமயங்களில் ஆசிரியர், 'கொஞ்சம் லேசாக எட்டிப் பாருங்கள்,' என்பார். வந்திருப்பவர் ஆணா, பெண்ணா என்பதைத் தெரிந்து கொள்ள, ஆசிரியரின் அறைக் கதவை அரைக்கால் சென்ட்டிமீட்டர் ஓசைப்படாமல் திறந்து பார்த்து நிலவரத்தைச் சொல்வோம்.

வரவேற்பு ஹாலைக் கடந்துதான் ஆசிரியர் வெளியேற வேண்டும். அறை அமைப்பு அப்படி. போகிற வழியில் ஹாலில் அமர்ந்துள்ள தாய்க் குலத்தைப் பார்க்க நேரிடுமே என்ற கூச்சத்திலும், அச்சத்திலும் வேறு வழியாக ஆசிரியர் வெளியேறி விடுவார். (அந்த வழி உதவி ஆசிரியர்களின் அறைக்குள் செல்லும் வழி. சுற்றி வளைத்து வெளியேற வேண்டும்.)

'சமாளித்து அனுப்பி விடுங்கள்,' 'என்ன என்று கேட்டு வைத்துக் கொள்ளுங்கள்,' 'ஆர்.கே.ஆர்., கிட்டே சொல்லுங்கள்,' 'நீங்க பாருங்க,' என்று அந்தந்தச் சமயத்துக்குத் தக்க மாதிரி சொல்லிவிட்டுக் காத்திருக்கும் தாய்க் குலத்தின் கண்ணில் படாமல் வெளியேறி விடுவார்.

அலுவலகத்தின் மாடியில் ஒரு பிரார்த்தனை ஹால் உண்டு. ஓரொரு வெள்ளிக் கிழமையும் மாலை ஐந்து மணிக்கு மாடியில் எல்லாருமாகக் கூடி முக்கால்

மணிநேரம் ராமாயணம், பாரதம், ராமகிருஷ்ணரின் போதனைகள் ஆகிய நூலிலிருந்து சில பகுதிகள், திருக்குறளில் ஒரு அதிகாரம் என்று படிப்பது வழக்கம். பஜனைப் பாடல் பாடப்படும். சுவாமி சின்மயானந்தரின் கூட்டம் துவங்குமுன் இனிமை யான பஜனைப் பாடல்கள் பாடப்படுவதுண்டு. அந்தப் பாடல்களில் சில இங்கும் பாடப்படும்.

ஆசிரியருக்கு இசையில் நல்ல விருப்பமும், ஈடுபாடும் உண்டு. அவர் ஒரு பஜனைப் பாடல் பாடுவார். மற்றவர்கள் சேர்ந்திசைப்பார்கள். இரண்டு அல்லது அதிக பட்சம் மூன்று பாடல்கள். கற்பூர ஹாரத்தி நடக்கும் போது எல்லாருமாக எழுந்து வரிசையாக நின்று, 'எல்லாரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே அல்லாமல் வேறொன்றறியேன் பராபரமே!' என்ற வரிகளை மும்முறை சேர்ந்த குரலிசையில் கூறுவது வழக்கம்.

சுவாமி சின்மயாவுடன் புனித யாத்திரையாக காசி, ஹரித்துவார், உத்தரகாசி, கயா, தட்சிணேஸ்வர், பூரி ஜெகன்னாத் ஆகிய இடங்களுக்கு ஆசிரியரும், அவர்களது நண்பர் குழுவும், பிரம்மசாரியாக அப்போது இருந்த நானும் சென்ற நேரம். ஹரித்துவாரில் ஒரு கோயிலில் வழிபாட்டு முறை ஆசிரியரை மிகவும் கவர்ந்தது.

பூஜை முடிந்ததும் வழிபாட்டில் கலந்து கொண்டவர்கள் எழுந்து வரிசையாக நின்றனர். அர்ச்சகர் ஒரு கூடையில் மலர்களை எடுத்து வந்து ஒவ்வொருவரிடமும் ஒன்று கொடுத்துச் சென்றார். தீபம் காட்டி முடித்ததும் ஓரொருத்தராக இறைவனது பிரதிமையை அணுகித் தன் கையிலிருந்த புஷ்பத்தை

தெய்வத்துக்குச் சமர்ப்பித்துவிட்டு, வெளியேறும் வாசல் வழியாகச் சென்றனர்.

அந்தக் காட்சியைக் கண்டதிலிருந்து குமுதம் அலுவலக பிரார்த்தனை ஹாலிலும் அதே முறை அனுசரிக்கப்பட்டது.

பிரார்த்தனைக்குப் பல சமயம் பிரபலமான உபன்யாசகர்கள், காலட்சேபக்காரர்கள், பஜனை கோஷ்டியினர் என்று வெளியாரை வரவழைத்து நிகழ்ச்சி நடத்தச் சொல்லுவது வழக்கம். அந்த நேரங்களில் மட்டும் மாலை ஆறரை கூட ஆகிவிடும். ஆனால், உபன்யாசத்தில் உள்ள சுவையும், இனிமையும் எல்லாரையும் உட்கார வைத்துவிடும்.

காலட்சேபக்காரர்களை வரவழைப்பதில் முக்கிய நிபந்தனை - எழுதாத சட்டம் மாதிரி - ஒன்று ஆசிரியர் விதித்திருந்தார்.

தாய்க்குலம் தவிர்க்கப்பட வேண்டும்!

ஆனால், பல காலட்சேபக்காரர்கள், தங்களது இல்லத்தரசியை சுதி போடவோ, சேர்ந்து பாடவோ அழைத்து வருபவர்களாக இருப்பார்கள். வயசானவராக இருந்தால், மருமகள், பேத்தி என்று யாராவது வருவார்கள். 'கணவன் மனைவி இருவருமாகச் சேர்ந்து இசைத்தால்தான் நிகழ்ச்சி எடுபடும்,' என்று சிலர் விவாதிப்பார்கள்.

'அந்தக் கதையே வேண்டாம் இங்கே,' என்பது போல அத்தகைய காலட்சேபக்காரர்களை அழைப்ப தில்லை.

ஒரு காலட்சேபக்காரர் நாடக பாணியில், புதுமையாக ராமாயணக் காட்சிகளை சொல்பவர் என்று அறிந்து அவரை ஏற்பாடு செய்திருந்தோம். பரதனும், கைகேயியும் பேசிக் கொள்கிற காட்சி என்றால், அவர், திடுமென ஓர் ஓரமாகச் சென்று கைகேயி போல் குழைந்து பாசத்தோடு பேசுவார். உடனே, மறு ஓரம் சென்று பரதன் போல் குமுறுவார். சிவாஜி கணேசன் மாதிரி நல்ல குரல் வளம். பாத்திரங்களுக்கு ஏற்பக் குரலை மாற்றி மாற்றி உணர்ச்சியோடு பேசுபவர் என்று அறிந்து அவரை அழைக்க ஏற்பாடு செய்யப் பட்டிருந்தது.

அன்று -

குறிப்பிட்ட நாடக பாணிக் காலட்சேபக் காரர் என் தலையில் போட்ட குண்டு: 'வீட்டிலே அவளும் வந்திருக்கிறாள். என்னை விடப் பிரமாதமாக டயலாக் பேசுவாள்.'

'என்ன சார் இப்படிச் சொல்கிறீர்கள்? நான்தான் சொல்லியிருந்தேனே, பொம்மனாட்டி களை அழைச்சிட்டு வரவேண்டமான்னு.'

'அப்படியில்லே... கச்சேரி சோபிக்கணு மில்லையா?'

காலட்சேபக்காரர் இன்னும் வரக் காணமே என்று மாடியில் எல்லாரும் எதிர்பார்த்துக் காத்திருந்தனர். ஒருத்தர் கீழே விரைந்து வந்து, 'எல்லாரும் ரெடியாக இருக்காங்க,' என்று பரபரத்தார்.

நான் விரைந்து மாடிக்குச் சென்று ஆசரியரின் காதருகில், 'வந்து... ஒரு சின்ன இக்கு...' என்று அசடு வழிந்தேன். 'பாகவதர் கிட்டே சொல்லியிருந்தேன்.

அப்படியும் அவர் ஒய்ஃபோடு வந்துவிட்டார். என்னவோ சொல்றார் அப்பத்தான் நல்லாருக்கும் காலட்சேபம்னு.'

ஆசிரியரின் முகம் இறுகியது. ஒரு பதிலும் சொல்லவில்லை. 'நீங்க சரியாகச் சொல்லியிருக்க மாட்டீர்கள்,' என்று அவர் நினைக்கிறார் என்று எனக்கு உறுத்தல். பயம்.

அதே வேகத்தோடு கீழே போனேன் - காலட்சேபக்காரரிடம், 'சார், நிலைமை தர்ம சங்கடமாயிருக்கிறது. இது வரைக்கும் முன்னுதாரணம் இல்லாததை, இப்ப செய்யறது என்னவோ மாதிரி இருக்கும்... நீங்க கொஞ்சம் ஒத்துழைப்பு பண்ணணும்... ஆசிரியருக்குச் சில விஷயம் பிடிக்காது. நான்தான் உங்ககிட்டே சரியாச் சொல்லலையோங்கிற மாதிரி அவர் நினைக்கக் கூடும். நீங்க பாகவதோத்தமர். உங்களுக்குத் தெரியாதது ஒண்ணுமில்லே..'

காலட்சேபக்காரர், 'சரி. எனக்கு ஒண்ணும் ஆட்சேபமில்லை, அடியே நீ இந்த ரூமிலேயே இரு... இங்கே இருக்கலாமோல்லியோ?' என்றார்.

'தாராளமாக.. டைம் ஆச்சு. எல்லாரும் உங்களுக்குத்தான் 'வெயிட்' பண்றாங்க. நீங்க பெரியவாள். தப்பா நினைச்சிக்கப்படாது...'

'நோ... நோ... நோ' என்று சமாதானமாக மேலே வந்தார் காலட்சேபக்காரர்.

அதியற்புதமாக நாடக பாணிக் காலட்சேபத்தை செய்து முடித்தார். ஒரு மணி நேரத்துக்கும் மேலாக நடந்தது. அனைவரும் பரவசமானோம்.

ஆசிரியர், அந்த ஒரு மணி நேரமும் கண்களை மூடிக் கொண்டு ஆழ்ந்து ரசித்தவாறிருந்தார்.

காலட்சேபம் முடிந்து காலட்சேபக்காரர் மங்களம் பாடினதும் அனைவரும் எழுந்து நின்றோம். கற்பூர ஹாரத்தி ஆயிற்று.

காலட்சேபக்காரருக்கு உரிய மரியாதை செய்து அனுப்பப்பட்டது.

ஆசிரியர் சொன்னார்; 'ரொம்ப அற்புதமாகச் செய்தார். அந்த அம்மாளும் நல்ல உணர்ச்சியோடு பேசினாங்க.'

நான் திடுக்கிட்டு, 'அம்மா எங்கே வந்தாங்க. அவங்களைத் தான் நான் அதட்டிக் கீழேயே டெலிபோன் ரூமிலே உட்கார்த்தி வைத்து விட்டேனே. மேலே பாகவதர் மட்டும் தான் வந்தார். நீங்க என்ன நினைச்சீங்க?'

'நான் எங்கே பார்த்தேன். கண்ணை மூடிக் கொண்டு விட்டேன். இந்த சுந்தரேசமனுஷன் கிட்டே சொல்லியிருந்தும், குடும்ப சகிதமாக காலட்சேபக்காரரை அழைத்துக் கொண்டு வந்து விட்டாரே,' என்று என் மனசிலே உங்க மேலே கொஞ்சம் எரிச்சல் கூட,' என்றார். பிறகு மகிழ்ச்சியோடு, 'அவரேதான் பெண் குரலாகவும் பேசினாரா? ரொம்ப அற்புதம் சார்,' என்றார்.

கீழே பாகவதரை அனுப்பி வைக்க வந்தேன். டெலிபோன் ஆபரேட்டர் அறை 'கரோ' என்று இரண்டு கிடந்தது. விளக்குப் போட்டுக் கொள்ள வேண்டும் என்ற உணர்வு கூட இல்லாமல் இடிந்து போய் அந்த அம்மாள் (காலட்சேபக்காரரின்

சம்சாரம்) இருளோடு இருளாக அமைதியாக உட்கார்ந் திருந்தார்.

விளக்கைப் போட்டு விட்டு, 'பாவம், உங்களை இருட்டில் உட்கார்த்தி வெச்சுட்ட பாவம் எங்களுக்கு...ரொம்ப மன்னிச்சுக்குங்க... ஆசிரியர் பாலிசி அப்படி,' என்று அம்மாவுக்கும் வெற்றிலை பாக்கு, பிரசாதம் தட்டில் வைத்துத் தந்தோம்.

அம்மாள் முக மலர்ச்சியுடன், 'எனக்கு வருத்த மில்லை, சந்தோஷம்தான். இப்படிக் கூட மனுஷா இருக்கிறாளே, ஸ்ரீராமர் மாதிரி!' என்றார்.

என் மனசிலிருந்து பாரம் இறங்கின மாதிரி யாகிறது.

**நன்றி : தினமலர், கதைமலர்**

## 3

**நா**ற்பது பக்க நோட்டுப் புத்தகம் ஒன்றில் ஆசிரியர் (எஸ்.ஏ.பி) எனக்கு ஒரு கடிதம் எழுதித் தந்தார். கடிதப் பாணியில் கருத்தை வெளியிடுவது நேரில் பேசுவது போல் இயற்கையாக இருக்கும் என்ற எண்ணம் அவருக்கு உண்டு.

அறிஞரும், பத்திரிகை ஆசிரியரும், நாவலாசிரியரும், இலக்கிய மேதையும், ஆன்மிக வாதியும், புதுமை விரும்பியும், என்றும் மார்க் கண்டேய உள்ளம் கொண்டவருமான அந்த மாபெரும் இமயத்தின் மடியில் பொடியளவான சிறு கல்லாக நான் இருந்தவன்.

கல்லாதவனாக இருந்தவன் என்றும் சொல்லலாம்.

மாலைமதிக்கு நாவல் ஒன்று எழுதப் பணித் திருந்தார்.

நாவல் பிரசுரத்துக்கு ஏற்றுக் கொள்ளப்படாத தரத்தில் இருந்தது. அந்தச் செய்தியை, எனக்கு அவர் இரண்டே வார்த்தையில், “ஒண்ணும் சரியில்லையே?” என்று கூறி நிராகரித்திருக்கலாம்.

நான் அவர் கீழே, அவரது பிரிவில் வேலை செய்யும் ஊழியன். உதவி ஆசிரியன். அறிவிலோ, அந்தஸ்திலோ, இலக்கியத்திலோ, திறமையிலோ

கொஞ்சமும் ஒப்பிடக்கூடிய தகுதியுள்ளவன் அல்ல. என் முதலாளியும் அவரே. ஆசிரியரும் அவரே. தலைவரும் அவரே.

ஆனாலும் அவர், என் மனம் நோகலாகாது என்பதற்காக, நான் எழுதிய நாவல் ஏன் உடனடியாக ஏற்புடையதாக இல்லை என்பதற்காகத் தகுந்த விளக்கம் கொடுத்து, கதை என்பது எப்படி இருக்க வேண்டும், அதன் லட்சிய லட்சணம் என்னென்ன என்பதைத் தெரிவித்து நீண்ட கடிதமாக எழுதி என் கையில் கொடுத்தார்.

அந்தக் கடிதத்தை அப்படியே தந்திருக்கிறேன். ஒரு சிறுகதையையோ, நாவலையோ கண்மூடித் தனமாக, அவசரமாக அவர் நிராகரிக்கவோ புகழவோ செய்தது கிடையாது. காரண காரியங்கள் கட்டாய மிருக்கும்.

என் நாவலைப் பற்றி விமர்சிக்கும்போது நாவலின் லட்சணம் எப்படி இருக்கவேண்டும் என்பதற்கு எத்தனை புத்தகங்களிலிருந்து உதாரணங் களும், ஆதாரங்களும் காட்டி எழுதியிருக்கிறார் என்பதைப் படித்தபோது நான் பிரமித்ததுபோல் உங்களுக்கும் நிச்சயம் பிரமிப்பு ஏற்படும். எதற்காக அவர் இப்படி மெனக்கெட வேண்டும்? அதுதான் அவர்.

நாற்பது பக்க நோட்டில் கடிதம் இவ்வாறு துவங்கியிருந்தது:

**ஓம்**

விநாயகப் பெருமானுக்கு வணக்கம். ஆறுமுக வேலனுக்கு வணக்கம். கலைமகளுக்கு வணக்கம்.

1–8–82

அன்புள்ள ஐ.ரா.சு. அவர்களுக்கு வணக்கம்

தாங்கள், நேற்று ப.ச.சு. மூலம் நான் விடுத்த வேண்டுகோளுக்கு இணங்கி மாலைமதிக்கான நாவலின் 4 அத்தியாயங்கள் அடங்கிய கோப்பை அனுப்பி வைத்ததற்கு நன்றி.

'எனக்கு மட்டும் காதல்' என்ற தலைப்பு கவர்ச்சியாக இருப்பதாகவே நினைக்கிறேன். பொருத்தமானதுதானா என்பதைப் பின்பு பார்த்துக் கொள்ளலாம். அதற்கு, வேண்டிய அவகாசம் இருக்கிறது.

கதையைப் பார்த்தேன். அழகாகவும், சுவையாகவும் எழுதப்பட்டிருக்கிறது என்பதை எடுத்த எடுப்பிலேயே சொல்லிவிடுவது நல்லது. புதுமையான உத்திகளும் ஆங்காங்கே கையாளப்பட்டிருக்கின்றன. சரளமான நடை. விறுவிறுப்பானதும் கூட.

மொத்தத்தில் 4 அத்தியாயங்களும் திருப்தியாக அமைந்துள்ள போதிலும். ஓரிரு திருத்தங்கள் அவசியம் என்று தோன்றுகிறது. அவற்றைச் செய்வது சாத்தியமாக இருந்தால், கதையின் சுவை கூடும் என்பது என் கருத்து. தாங்களும் யோசித்துப் பாருங்கள்.

மேலெழுந்தவாரியாகப் படிக்கும் போதே, சம்பவங்கள் விவரிக்கப்பட்டிருக்கும் முறையில் ஒரு தவிர்த்திருக்கக்கூடிய மெத்தனமான நகைச்சுவை அவ்வப்போது தலைகாட்டி, 'இவை உண்மையான பாத்திரங்கள், இவை நிஜமாக நடந்த நிகழ்ச்சிகள்' என்ற நம்பிக்கை வேரூன்றி விடாதபடி தடுத்துக்

கொண்டிருப்பதைச் சுட்டிக் காட்டாமல் இருக்கமுடிய வில்லை.

உதாரணங்கள்: 1. கதையை இங்கே தொட்டுப் பாருங்கள். கொஞ்சம். சூடு இனிமேல்தான் பிடிக்கப் போகிறது.

(கதாசிரியருக்குத்தான் கதை. படிப்பவர் களுக்கு அது வாழ்க்கைச் சரித்திரம்.)

2. சமீப சினிமாக்களில் காதலர்கள் சந்திக்கும் போது அவர்கள் மௌனத்துடன் பார்த்துக் கொள்வதும், பின்னணியில் ஆர்ப்பரிப்பது போன்ற இசை கொட்டப்படுவதும் ஏன் என்பது புரிந்தது.

(தலைவனின் தோழன், தலைவனைக் கேலி செய்யும்போது இப்படிப் பேசலாம். தன்னுடைய காதலைப் பற்றித் தலைவன் இதுபோல் பேச முடிந்தால், அவனுக்கு ஏற்பட்டிருப்பது உண்மையான காதலாக இருக்க முடியாது. காதல் என்பது விளையாட்டல்ல. படாபட், காதல் காரணமாகத் தற்கொலையே செய்து கொள்ளவில்லையா?)

3. 'இந்த மகாப்பட்ட புடவைகளுக்கு விலையைச் சரியாகப் போட வேண்டும் என்று கிழ போல்ட் ஏதோ ஃபைலைத் தேடத் தொடங்கி விட்டது.'

(இப்படி வாய்விட்டுப் பேசலாம், அது இளமைக்குச் சலுகை. ஆனால், நினைக்கக் கூடாது. அது வில்லனுடைய லட்சணம்!)

எனக்கு என்ன தோன்றுகிறது என்றால், இந்த 'தான்' கண்ணோட்டம் தேவையில்லை என்பதே.

பாத்திரத்தை இன்னும் நன்றாகப் புரிந்து கொள்ள உதவுவதற்குப் பதில் அது ஒரு குறுக்குச் சுவர் எழுப்பி விடுகிறது. ஓர் அலட்சிய பாவத்தை, ‘சரித்தான் போடா! நீயுமாச்சு, உன் ஒண்ணேகால் ரூபாயுமாச்சு!’ என்று தூக்கி எறிந்து பேசுகிறாய் போன்ற ‘டோண்ட் கேர்’ மனப்பான்மையை அது அனாவசியமாகக் கதாசிரியர் மேல் — அதாவது தலைவன் மேல் — ஏற்றி ஆன்ம நேயத்துக்குக் குந்தகம் செய்கிறது.

இன்னொரு விஷயத்தையும் இங்கு குறிப்பிடுவது பலனளிக்கும் என்று நம்புகிறேன். சம்பவங்கள் மிகக் குறைவாக இருக்கிறாற்போல் (பிரமை?) தோன்றுகிறது.

பொதுவாக, கதை என்பது என்ன? சில பேருக்கு நேரும் சில நிகழ்ச்சிகளின் தொகுப்பு — நிகழ்ச்சிகளுக்கு ஊட்டம் தரும் பொருட்டு உரிய இடங்களில் சேர்க்கப்படும் எண்ணக் கலவையுடன். அவ்வளவே.

ஆக, தொட்ட இடமெல்லாம் ஏதாவது நடக்க வேண்டும் அல்லது ஏதாவது ஒரு முக்கிய நடப்பைப் பற்றி ஒரு முக்கிய பாத்திரம் சிந்திக்க வேண்டும்.

உதாரணமாக, குருட்டாம்போக்கில் Pearl Buck–ன் Peony–ஐப் புரட்டுகிறேன், 137–ம் பக்கம்.

“For three days Peony kept in her table drawer the poem that Kuellan had bade her give David, awaiting a proper time to give it to him.”

Sidney Sheldon –
Rage of Angels

*207-ம் பக்கம்*

Patric Magmic was appraising the jury and he was an expert at it. As Jeniffer drove on about the statistics Magmi could tell that the jurors were getting bored with this trial. It was becoming technical. The trial was no longer about a crippled girl. It was about trucks and braking distance and fault from the drivers. The jurors were losing interest.

Abbas's Bobby

*65-ம் பக்கம்*

Raja, feeling shy and bashful also blew a kiss.

But he was no longer at the crowded railway station.

He was in his lonely flat.

A servant was quietly observing Raja blowing a kiss and feeling shy.

He misunderstood the gesture.

He came forward and said, "Driver is ready sir."

*அசோக மித்திரனின் 18-வது அட்சக்கோடு:*

*55-ம் பக்கம்*

*தவறாமல் என்னைக் கோகு முதல் நான்கைந்து பந்துகளுக்குள் அவுட் ஆக்கிய வண்ணம் இருந்தான். நாங்கள் கிரிக்கெட் ஆடிய மைதானத்தி லேயே சில முஸ்லிம்கள் ஹாக்கி பழகிக் கொள்ள வந்தார்கள். அவர்களுடைய வெள்ளைப் பந்தைத்*

தற்செயல் மாதிரி எங்கள் பக்கமே அடிப்பார்கள் ஒருநாள் எங்கள் கோஷ்டியில் காமேஷ் என்கிற பையன் அவர்களுடைய பந்தைப் பொறுக்கி வேறு திசையில் எறிந்தால் அவர்கள் அவ்வளவு பேரும் எங்களை ஹாக்கிக் கட்டையால் அடிக்க வந்தார்கள்.

ஜானகிராமனின் மரப்பசு:

170ம் பக்கம்

பென்னெட் புன்சிரிப்புடன் காத்துக் கொண்டிருந்தார்.

எனக்கு மேலே எப்படித் தொடங்குவது என்று புரியவில்லை.

கோபாலிக்கு இவ்வளவு தூரம் தெரியுமா?

எப்படி என்று கேட்டுக் கொண்டிருந்ததில் மனசு இரண்டாகப் பிரிந்தது.

நீல பத்மநாபனின் பள்ளி கொண்டபுரம்:

179-ம் பக்கம்

அவர் இடைமறித்துப் பேசினார். "இல்லை பாலீ, அதை நீ என்கிட்டே சொல்லித்தான் ஆகவேண்டும்."

சிறிது நேரம் யாரும் பேசாமல் இழைந்தது பஞ்சு பொதி போன்ற மேகங்கள் நிலவைச் சற்று நேரம் மறைத்துவிட்டு விலகிச் சென்றன.

"அப்பாவா! அதை அறிய நான் ரொம்ப சிரமப்பட வேண்டியிருந்தது. அப்பாவின் பழைய ஏட்டுச் சுவடிகள், புத்தகங்கள் எல்லாவற்றையும் பல நாள்கள் புரட்டினேன்."

ஆக எங்கே தொட்டாலும் உண்மை மனிதர்கள், உண்மை நடப்பு, உண்மைப் பேச்சு எல்லா வற்றுக்கும் மேலாக, வாழ்க்கையில் காயம்பட்ட (சில சமயம் கிளுகிளுப்பு' எய்தும் அதிர்ஷ்டம் படைத்த) மனிதர்களுக்கும், நோய், துன்பம், மரணம் இவற்றுக்கும் உள்ள தொடர்பு. பாழுங்கிணற்றுக்கு வெளியே ஓநாய், பிடி நழுவினால் முதலை, இடையில் கூடு சிதைந்து நாக்கில் சொட்டும் தேன் துளிகள் - இதுதான் வாழ்க்கை என்ற பிரக்ஞை. இன்னும் என்னென்னவோ எழுத வேண்டும். அவகாசமில்லை, மன்னியுங்கள் நான் கேட்டுக் கொள்வதெல்லாம் 'தயவு செய்து, திரும்ப வாசித்து, இதே நிகழ்ச்சிகளைப் பேனாவில் மைக்குப் பதில் கண்ணீரை அடைத்துக் கொண்டு எழுதுங்கள்' என்பதுதான். அதிலும் மிகைப் படுத்தாதீர்கள். இயற்கையாக எழுதுங்கள்."

என் ஆசானும் எஜமானனுமாகிய ஆசிரியர் எழுதிய கடிதத்தின்படியே இதனை இப்போது பேனா வுக்குப் பதில் கண்ணீரை அடைத்துக் கொண்டு எழுதி யிருக்கிறேன்.

ஆசிரியர் அவர்களோடு மணிக்கணக்கில், நாட்கணக்கில் எங்கே உட்கார்ந்து இலக்கிய சர்ச்சையும், கதையும், நாவலும் ஸீரியஸாகவும், சிரிப்பாகவும் பேசினேனோ அந்த இடத்தில் அவர் உட்கார்ந்திருந்த சோபாவில் அவரது புகைப்படம்

அசைவற்று மாலையோடு வீற்றிருந்த கொடுமையான காட்சியைக் காணும்படி விதி சதி செய்துவிட்டது.

எழுத்துக்கு அவரது அறிவுரை, எதையும் மிகைப்படுத்தாதீர்கள்.

வாழ்க்கைக்கும் உணர்ச்சிகளுக்கும் கூட அதே அறிவுரைதான் என்று எண்ணிக்கொள்கிறேன்.

**நன்றி: தினமணி – கதிர்**

# 4

ஆசிரியரோடு அவரது சொந்த ஊராகிய கானாடு காத்தானுக்குப் போயிருந்த சமயம், பங்களாவில் மாலையில் தோட்டத்தில்அமர்ந்து பேசிக் கொண்டிருந்தேன்.

செட்டி நாட்டு விசேஷமான முறுக்குகளைப் பணியாளர் ஒரு பெரிய தட்டில் வைத்துக் கொண்டு வந்தார்.

"எடுத்துக்குங்க!" என்றார் ஆசிரியர். இருவரும் ஒரே தட்டிலிருந்த முறுக்கைச் சுவைத்தவாறு பேசிக் கொண்டிருந்தோம்.

ஆசிரியர் முறுக்கில் சிறிது ஒடித்து, விள்ளலைத் தட்டில் ஓர் ஓரம் வைத்தார்.

நான் சாப்பிடும்போது அதையும் எடுத்துச் சாப்பிட்டு விட்டேன். மீண்டும் அதே மாதிரி கொஞ்சம் ஒடித்து வைத்தார்.

பெரிசாக இருக்கிறது என்பதற்காக நொறுக்கி நொறுக்கி வைக்கிறார் போலும் என்று அதையும் எடுத்துச் சாப்பிட்டு விட்டேன்.

இப்படி இரண்டு மூன்று தரம் ஆனதும் ஆசிரியர் சிரித்தவாறே, "அது இருக்கட்டும். ஸ்வாமிக் காக வைத்தேன்" என்றார்.

அவர் சொன்னதிலிருந்து நானும் கூட எதைச் சாப்பிட்டாலும் துளி கிள்ளி, தெய்வத்துக்கு வைத்துவிட்டே சாப்பிடும் வழக்கத்தைக் கைக் கொண்டேன்.

மிகச் சிறந்த நகைச்சுவை உணர்வு கொண்டவர் ஆசிரியர். மயிலை, வேங்கடேச அக்ரஹாரத்தில் பிரசுரகர்த்தரின் வீட்டிலிருந்து ஆசிரியர் கார் ஓட்ட, ரா.கி.ர., புனிதன், நான் மூவரும் அவருடன் காரில் இருந்தோம். சாயி பாபா கோவில் அருகே இருந்த மிகக் குறுகலான பாலத்துக்குள் ஆசிரியரின் கார் நுழைந்து பாதி தூரத்துக்கும் அதிகமாக வந்துவிட்டது. எதிரே அதே சமயம் இரட்டை மாட்டு வண்டி ஒன்றும் வந்து விட்டது.

வண்டிக்காரன் எங்கள் காரைப் பின்னுக்கு நகரும்படி கத்தினான்.

ஆசிரியர் சற்று மௌனமாக இருந்தார்.

நாங்களெல்லாம், "பின்னாலே போகச் சொல்றான் போலிருக்கு" என்றோம்.

ஆசிரியர் காரை ரிவர்ஸில் ஜாக்கிரதையாகப் பின்னுக்கு எடுக்க எடுக்க, வண்டிக்காரன் முன்னேறி வந்தான். பால நுனிக்கு வந்ததும், காருக்குள்ளிருந்த ஆசிரியரைப் பார்த்து, "ஏய்யா, மாட்டு வண்டி பின்னுக்குப் போறது சுலபமா? கார் பின்னுக்குப் போவது சுலபமா? என்னவோ ஆட்டம் காட்டிக்கிட்டு நின்னியே?" என்று ஒரு கூச்சல் போட்டுவிட்டு வண்டியை ஓட்டிச் சென்றான்.

நான் புனிதனிடம், "அவன் சொல்ற லாஜிக் கரெக்ட்தான்" என்றேன்.

புனிதன், "ஆமாம், ஆமாம்" என்றார், ரா.கி.ர.வும் ஆமோதித்தார். "ஆமாம்! பாவம், வண்டி எப்படிப் பின்னாலே போகும்?"

307333/3779032

ஆசிரியர் சில விநாடி மௌனமாக இருந்து விட்டுப் பின்பு ஒரு குறுஞ் சிரிப்புடன், "உங்களுக்கு கெல்லாம் துணை ஆசிரியர் என்று பெயர். எனக்குத் துணை செய்யற மாதிரியா பேசுகிறீர்கள்?" என்றார்.

நாங்கள் சமாளித்து, "அந்த ஆளை நீங்க இருக்கிறதாலே சும்மா விட்டோம்" என்றோம்.

"அப்போ விட்டுட்டீங்க கோட்டை. எந்தத் தப்புன்னாலும் நாமதான் பண்ணியிருப்போம்னு நினைக்கக் கூடாது. நாம முக்கால் வாசி தூரம் வந்தது தெரிஞ்சும் அவன் எப்படிப் பாலத்துக்குள் வரலாம்? நியாய அநியாயம் இல்லையா?" என்றார்.

நாங்கள் அசடு வழிந்தோம்.

ஆசிரியரை ஓர் அரசியல் கட்சித் தலைவர் பார்க்க வந்திருந்தார். அவர் சற்று நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டுப் போனதும் நான் உள்ளே சென்றேன். ஆசிரியர் இடிந்து போனவர் போல் உட்கார்ந்திருப்பதைப் பார்த்து அதிர்ச்சி அடைந்தவனாக, "ரொம்ப டேமேஜா?" என்பது போலக் கேட்டேன். அதாவது நிதி அது இது என்று சில பிரமுகர்கள் மடக்க வருவார்கள்.

ஆசிரியர் தன்னை ஒரு தரம் சிலுப்பிக் கொண்டு, "சே! நான் கூட ஒரு நிமிஷம் ஒரு மாதிரி ஆகிவிட்டேன்" என்றார்.

வந்த பிரமுகர் ஆசிரியரின் எளிமையை ஓரே அடியாகப் புகழ்ந்து, "உங்களுடைய எளிமையான தோற்றம், சாட்சாத் ராமலிங்க அடிகளை என் நினைவுக்குக் கொண்டு வருகிறது" என்றாராம் தொண்டை கரகரக்க.

ஆசிரியர் பெருமூச்செறிந்து, "புகழ் உரைகள் எந்த வடிவத்தில் வேணுமானாலும் வரும். நாம அதை யெல்லாம் நிஜம் என்று நினைத்துக் கொண்டு விடக் கூடாது. சரி, நம்ம வேலையைப் பார்க்கலாம்" என்று இதழுக்கான வேலையைக் கவனிக்கத் தொடங்கினார்.

ஆசிரியரைப் பார்க்க அவரது பங்களா வுக்குச் செல்லும் சமயங்களில் சில வேளைகளில் அவர் பூஜையிலிருப்பார். அல்லது, உணவருத்திக் கொண்டிருப்பார்.

இன்னார் வந்திருக்கிறார் என்று வேலையாள் போய்ச் சொல்லிவிட்டு, வரும்போதே கையில் பலகாரம் பல தினுசுகள், மோர் என்று தட்டில் வைத்து எடுத்து வந்துவிடுவார்.

வீட்டுக்கு வந்தவர், சாப்பிடாமல் வெளியே அமர்ந்திருக்க, தான் மட்டும் டைனிங் ஹாலில் சாப்பிடுவது என்பது அவருக்குப் பழக்கமில்லை.

டெலிபோன் அடித்ததும் எடுத்து எல்லாரையும் போல, 'ஹலோ!' என்று போனில்

கூப்பிட்டுக் கொண்டிருந்த குமுதம் ஆசிரியர் குழுவினர், 'ஹரி ஓம்' என்று சொல்ல ஆரம்பித்தோம்.

ஆசிரியருக்கு சுவாமி சின்மயாவின் பழக்கம் ஏற்பட்ட பிறகு, 'ஹலோ' போய், 'ஹரி ஓம்' வந்து விட்டது.

ஆரம்பத்தில் எங்களுக்கெல்லாம் கூச்சமாக இருந்தது. ஆசிரியர், "நல்ல வார்த்தைகளைச் சொல்லக் கூச்சப்படுவானேன்?" என்பார். நாளடைவில் பழகிப் போய் நேரே பார்த்தாலும்கூட 'ஹரிஓம்' என்றே சொல்லிக் கொள்ளத் தொடங்கி விட்டோம்.

ஆசிரியர் தானாகச் சட்டைகள் வாங்கிக் கொண்டதில்லை. பிரசுரகர்த்தர் தடாலென்று ஏதாவது ஒருநாள் 'நாம போயிட்டு வந்துடலாமா?' என்று கேட்டு ஆசிரியரைத் தையல்காரரிடம் கூட்டிக் கொண்டு போவார்.

அந்த ஆள் அளவெடுப்பதில் பிரமா தமானவரே தவிர, தைத்து உருப்படியாகத் தரும்போது கை தொள தொள அல்லது சட்டை முழங்காலுக்குச் சற்று மேல் வரை என்பது போலிருக்கும்.

ஒரே சமயம் பதினைந்து இருபது சட்டைகள் தைக்கும்படி பிரசுரகர்த்தர் தையல்காரருக்குக் கட்டளையிட்டு விடுவார்.

அவனும் தசாபுசாவென்று தைத்துத் தள்ளி விடுவான்.

"சட்டை கொஞ்சம் பெரிது போலிருக்கு," என்று நாங்கள் விமரிசித்தால், "அதெல்லாம் ஜோராக

இருக்கு" என்று சொல்லிக் கொள்வாரே தவிர, குறை கூறியதே இல்லை.

நான் குமுதத்தில் உதவி ஆசிரியராகப் பணி புரிந்தபோது சில விஷயம் தெரியாத பாமர உறவினர்கள், 'குமுதத்தில் ஆசிரியராக இருக்கான்' என்பார்கள். ஆசிரியருக்கும், உதவி ஆசிரியருக்கும் அவர்கள் பேதம் பார்ப்பதில்லை.

அவர்கள் வீட்டுக் குழந்தை சமர்த்தாக ஒரு காரியம் செய்திருந்தாலோ, சுட்டித்தனமாகப் பேசி யிருந்தாலோ, 'போடேன் உன் குமுதத்திலே' என்பார்கள்.

என் குமுதமா?

பெருமைப்பட்டுவிடக் கூடாது. குமுதம் என்ற நிறுவனத்தில் ஆசிரிய இலாகாவில், ஆசிரியரின் கீழ் வேலை செய்யும் உதவி ஆசிரியர், துணை ஆசிரியர் என்ற பிரக்ஞையை நானோ, ரா.கி.ர.வோ, புனிதனோ எப்போதும் மறந்ததே கிடையாது. 'எடிட்டரைக் கேட்டுட்டுச் சொல்கிறோம்' என்போம். நூற்றுக்கு நூற்றொன்று சதவிகிதம் அவரது கட்டுப்பாட்டிலேயே இருந்தோம். எங்களுடைய லிமிட் எது என்பதை மூவரும் நன்கு அறிந்திருந்தோம். முழுப் பெருமையும் ஆசிரியருக்கே உரியது என்பதைவிட முழுப் பொறுப்பும் ஆசிரியருடையதே. அட்டைப் படத்துக்கு ஆசிரியரே டிரான்ஸ்பரென்சி செலக்ட் செய்வார்.

ஆசிரியர் குழுவில் எனக்கோ ரா.கி.ர.வுக்கோ, புனிதனுக்கோ சில புகைப்படங்கள் மிகவும் பிடித்திருக்கும். அதைச் சிபாரிசு செய்தால் ஆசிரியர் பொறுமையாக ஆராய்வார். சில வேளைகளில்

ஆர்வம் காரணமாக எங்கள் சிபாரிசே விவாத அளவுக்குச் சென்று விடும். ஆசிரியர், "அட்டை சரியில்லேன்னா நான்தானே நாளைக்குப் பதில் சொல்லணும். உங்களையா கேக்கப்போறாங்க?" என்பார்.

பத்திரிகையின் ஆசிரியர் பொறுப்பு என்றால் அதில் வெளிவரும் வெளி அட்டையிலிருந்து கடைசி அட்டை வரையில் உள்ள சகல விஷயத்துக்கும் அவரே பொறுப்பு.

ஒரு நாலுவரி மேட்டரோ, ஒரு புகைப்படமோ எதிர்பாராதவிதமாகப் பலத்த கண்டனத்துக்குள்ளாகி புரட்சியே ஏற்படுத்தி விடக்கூடும்.

"நாளைக்கு கோர்ட்டுலே கேட்டால் பதில் சொல்லணுமே சார்!" என்று சிரித்தவாறு சொல்வார் ஆசிரியர்.

"ரொம்ப தாங்க்ஸ்'னு சினிமா விமரிசனத்தில் ஒரு வார்த்தை எழுதியிருக்கீங்களே, அதுக்கு என்ன அர்த்தம்?" என்று கோர்ட்டில் ஆசிரியரை ஒரு வக்கீல் உலுக்கு உலுக்கென்று உலுக்கின நிகழ்ச்சியை அவர் எப்போதுமே மறந்ததில்லை.

குமுதத்தின் மீது 'ஆசை' என்ற படத்தயாரிப்பாளர் வழக்குத் தொடர்ந்திருந்தார். 'துலாரி' என்ற இந்திப் படத்தின் தழுவல் 'ஆசை' படத்தை எடுத்த நடேசன் என்பவர் வழக்குத் தொடுத்திருந்தார் - 'வேண்டுமென்றே குமுதம் என் படத்தை மட்டமான முறையில் விமரிசனம் செய்திருக்கிறது என்னை ஒழிப்பதுதான் அதன் நோக்கம்' என்பதுபோலக் குற்றச் சாட்டு.

அந்த விமரிசனத்தை ஆசிரியர் ஒரு புதுமை யான முறையில் எழுதியிருந்தார். அதில் நடித்த நடிகர், நடிகை, காமிராக்காரர், கதை வசன ஆசிரியர், இசையமைப்பாளர், டைரக்டர் ஆகியோர் தாங்களே தங்களைப் பற்றி விமரிசனம் செய்து கொள்வது போல விமரிசனம் அமைந்திருந்தது.

இறுதியாக டைரக்டர் கூறுகிறார். 'என்னத்தையோ தயாரித்திருக்கிறேன். வாயில் வைக்க முடிகிறதா பாருங்கள். ரொம்ப தாங்க்ஸ்' என்று விமரிசனம் முடிந்திருந்தது.

தயாரிப்பாளரின் வழக்கறிஞர் விமரிசனத்தின் கடைசி வாக்கியத்தைப் பிடித்துக்கொண்டு அரை மணி நேரம் அறுத்துத் தள்ளிவிட்டார். அவர் சிலோன் வக்கீல் வேறு. சிலோன் தமிழிலும், ஆங்கிலத்திலுமாக ஆசிரியரைப் பலவிதமாகக் குறுக்கு விசாரணை செய்தார்.

''வாயில் வைக்க முடிகிறதா பாருங்கள்' என்பது புரிகிறது. 'ரொம்ப தாங்க்ஸ்' என்ற வார்த்தை போட்டிருக்கிறீர்களே, அது ஏன்?"

ஆசிரியர் ''அது டேஸ்ட் செய்து பார்த்ததற்காக நன்றி தெரிவிப்பது போல" என்று விளக்கினார்.

ஆனால் வக்கீல் விடவில்லை.

"தாங்க்ஸ் எப்போது சொல்வார்கள்?" என்று ஆசிரியரைக் கேட்டார். "அதுவும் ரொம்ப தாங்க்ஸ் எப்போது சொல்வார்கள்?"

"ஒரு உதவியை மனசுக்குப் பிடித்த மாதிரி செய்திருந்தால் சொல்லுவோம்"

"அப்போ, உங்களுக்கு ரொம்பப் பிடித்தமான முறையில் வாசகர்களை விமரிசனம் செய்யச் சொல்லித் தூண்டுகிறீர்கள். அப்படித்தானே?"

வக்கீல் எதைச் சொல்கிறார் என்று யாருக்கும் புரியவில்லை.

கனம் கோர்ட்டார் சொன்னார்: "இன்னும் சற்று விளக்கமாகச் சொல்லுங்கள்" என்று.

மேலும் அரை மணி நேரம் வக்கீல் உலுக்கினார், "ரொம்ப தாங்க்ஸின் உள் நோக்கம் என்ன?"

"வார்த்தை அழகுக்காகச் சில சமயம் சில வார்த்தைகள் அமைவதுண்டு," என்றார் ஆசிரியர். (கேஸ் தள்ளுபடியாகிவிட்டது.)

**வெ**கு நீண்ட வருடங்கள் கழித்து, நாவலாசிரியர் தீபம் நா. பார்த்தசாரதி தனிப்பட்ட முறையில் பி.ஏ. பரீட்சை எழுதுகிறார் என்று கேள்விப் பட்டு, 'ஏன் நாமும் கரெஸ்பாண்டென்ஸ் கோர்ஸில் ஒரு பி.ஏ. பண்ணினால் என்ன?' என்ற நைப்பாசை தோன்றியது.

குமுதத்தில் வேலை செய்தவாறே, ஆசிரியர் அவர்களுக்கோ நண்பர்களுக்கோ மூச்சு விடாமல் ரகசியமாக மதுரை யுனிவர்ஸிடியில் கரெஸ்பாண் டென்ஸ் கோர்ஸில் சேர்ந்து பி.யு.ஸி., பி.ஏ. முதலாம் ஆண்டு, பி.ஏ. இரண்டாம் ஆண்டு ஆக மூன்று வருஷம் படித்துத் தேறிவிட்டேன்.

மூன்றாவது ஆண்டு பி.ஏ.யில் எகனாமிக்ஸ் பாடங்கள் பிடிவாதமாக மண்டையில் ஏற மறுத்துச் சத்தியாக்கிரகம் செய்தன.

அவற்றோடு போராட - அந்தப் பரீட்சைக்கு மட்டுமாவது படிக்க இரண்டு தினங்கள் விடுமுறை எனக்கு. அவசியமாகப் பட்டது.

இதுவரை சொல்லாத ரகசியத்தை ஆசிரியரிடம் தயக்கத்துடன் சொன்னேன்.

அவர். "பி. ஏ அவ்வளவு பெரிசா?" என்று சிரித்தார். "பெயருக்குப் பின்னாலே அந்த எழுத்து இருந்தாதானா உங்களுக்குப் பெருமை? உங்க எழுத்தைக் காலேஜ்லே பாடமாக வைக்கிற மாதிரி நீங்க கதை எழுதுங்க. பி.ஏ. படிப்பு என்ன பெரிய படிப்பு?" என்றார்.

பி.ஏ. ஆசையை அந்தக் கணமே உதறிவிட்டேன். ஆசிரியர் எதையும் சுருக்கமாகவும், மனசில் நிற்கிற மாதிரியாகவும் சொல்லி விடுவார். எனது எழுத்தின் பெருமையை விரிவாக எடுத்துச் சொல்லி என்னைத் தேற்றினார்.

"அப்போ, நான் நாளைக்குப் பரீட்சை எழுதலாமா வேணாமா?" என்றேன்.

அவர் சுருக்கமாக, "மதுரையா, மெட்ராஸா, நீங்கதான் தீர்மானிச்சுக்கணும்," என்றார்.

அதாவது 'மதுரைப் பரீட்சை கட்டாயமாக எழுதப் போகிறீர்களா, பத்திரிகையில் கவனமாக இருக்கப் போகிறீர்களா?' என்ற அர்த்தம்.

ஆசிரியர் துறவி போல, அவருக்குப் பணம், புகழ், பட்டம், எதிலும் பற்றுக் கிடையாது. எம்.ஏ.பி.எல். என்ற பட்டத்தைக் கூட இம்ப்ரிண்டில் தன் பெயருக்குப் பின்னிருந்து நீக்கிக் கொண்டிருந்தார்.

**நன்றி: சாவி**

# குமுதத்தில் என் பயணம்

**புனிதன்**

## 1

'அறிவிலே தெளிவு, நெஞ்சிலே உறுதி, அகத்திலே அன்பினோர் வெள்ளம்' - இவை தான் எங்கள் ஆசிரியர் எஸ்.ஏ.பி அவர்கள்.

1951ல் நான் ரேடியோ இன்ஜினீயரிங் மாணவனாய் ஊர் விட்டு வந்து சேர்ந்த அந்த நாளில் பெருமதிப்புக்குரிய அண்ணன் தமிழ்வாணன் தொடர்பு ஏற்பட்டு, இறுக்கம் கண்டு, 'தேசபந்து' என்ற பெயரில் தமிழ்வாணன் அவர்களின் உதவியாளனாக 52'ல் குமுதம் அலுவலகத்தில் அடியெடுத்து வைத்த அந்த நாள் தொட்டு கடந்த ஏப்ரல் 6ம் தேதி புதன் கிழமை காலை 11 மணிக்கு தர்பூசணிச் சாற்றை ஆசிரியருடன் பகிர்ந்து அருந்தியது வரை அவர்களுடன் இடைவெளி விட்டுவிடாமல் மூச்சுக்

காற்று போல் ஒன்றிப் போன நாற்பதாண்டு காலத் தொடர்பு உண்டு.

'எழுத்தறிவித்தவன் இறைவன் ஆகும்' என்றால் எழுத்துத் தொழில் கற்றுத் தந்த எஸ்.ஏ.பி அவர்களும் எனக்கு இறைவன்தான். சிறுவர் கதைகள் எழுதிக் கொண்டிருந்த என்னை இரண்டாண்டு காலம் ஒதுங்கியிருந்து கவனித்து, பிறகு தமது இருக்கைக்கருகில் இடம் தந்தவர். நான் கிராமத்தான். அந்த வட்டத்துக்குள் தான் என் கதை எல்லையோ என்ற அச்சம் தலை தூக்கியபோது, 'நீ உட்ஹவுஸ், நீ ஸ்டின்பெக், நீ அகதா கிறிஸ்டி' என்று கொம்பு சீவிவிட்டு, 'அத்தனை வகைகளிலும் உன்னால் எழுத முடியும்' என்று எழுத்தறிவித்த இறைவன்.

இறைவனைப் பல பாவங்களில் நெருங்குவதுண்டு - தாயாக, தந்தையாக, தலைவனாக, தோழராக. நான் நெருங்கியிருந்ததெல்லாம் அவரைத் தோழராகக் கருதித்தான். அப்படி ஏற்றுக்கொள்ள அவர் இடம் தந்தாரே, அதை நினைத்துப் பெருமிதம் கொள்கிறேன்.

## என் வீட்டில் தங்கினார்

அவர் 'பிரம்மச்சாரி' தொடர் கதை எழுதிக் கொண்டிருந்த நேரம். நான் தற்காலிக பிரம்மசாரியாக இருந்தேன். மனைவி பிரசவத்துக்காகத் தாய் வீடு சென்றிருந்தாள்.

நான் புரசை வெள்ளாளத் தெரு 14ம் எண் வீட்டில். மாடியில் ஒண்டுக் குடித்தனவாசியாய் இருந்தேன். ஒரு நீண்ட சந்து கடந்து செல்ல வேண்டும்.

கீதை வகுப்புக்கு அவருடன் ரா.கி.ர., நான், சுந்தரேசன் மூவரும் சென்றுவிட்டுத் திரும்பும்போது - மூவருமே அப்போது ஒரே தெருவில்தான் - அவரவர் வீட்டு வாசலில் இறக்கி விட்டுவிட்டுச் செல்வார்.

அன்றைக்குச் சந்து முனையில் என்னை இறக்கிவிட்டுச் சற்று நேரம் நின்று படித்துக் கொண்டிருந்தவர், "நீங்க இப்ப பிரம்மசாரிதானே? நாளைக்கு நான் உங்க வீட்டுக்குவரேன். அங்கேயே உட்கார்ந்து எழுதப் போறேன்" என்றார் திடுதிப்பென்று.

எனக்கு என்ன சொல்வதென்று தெரியவில்லை. நான் கணக்குப் பிள்ளை பெஞ்சில் உட்கார்ந்து எழுதுவதுதான் வழக்கம். மேசை நாற்காலி கூடக் கிடையாது. வீட்டில் ஒரு மின் விசிறியும் இல்லை.

ஆசிரியர் என் வீட்டில் வந்து தங்கப் போகிறார் என்பதே எனக்கு 'த்ரில்'லாக இருந்தது. அதனால் எந்த வசதிக் குறைவு பற்றியும் அவரிடம் சொல்லவில்லை.

சொன்னபடியே மறுநாள் சந்து முனையிலேயே காத்திருந்து ஆசிரியரை என் ஒண்டுக் குடித்தன விட்டு மாடிக்கு அழைத்துச் சென்றேன். அப்போது அவர் முகத்தைக் கூர்ந்து பார்த்தேன். அதிலே ஓர் அதிசயம், பரவசம், குறுகுறுப்பு.

என் வீட்டு அமைப்பு: நுழைந்ததும் ஒரு நடையோடி, பக்கவாட்டில் குறுக்காய் ஓர் ஹால், ஒரு சமையல்கட்டு, பின்புறம் குழாயடி. பாத்ரூம், அதையொட்டிக் திறந்த வெளிக்குக் கம்பியடைப்

பாய்த் தந்து ஓர் அறை. அதுதான் என் ஸ்டடி ரூம். எனக்கு வாய்த்த வரப் பிரசாதம்.

மின்விசிறி இல்லாத குறையால் ஆசிரியர் சிரமப்படும்போது சங்கடமாய் இருந்தது. அது பற்றி வாயெடுக்கு முன் அவராகவே கேட்டார். "நம் ஆபீஸ் எலெக்ட்ரீஷியன் சுப்பிரமணியம் இந்தத் தெருதானே."

"ஆமாம் சார். எதிரில்தான் இருக்கிறார். நானும் சொல்லிக் கொண்டுதான் இருக்கிறேன். நேர மில்லை என்று-"

"போய்க் கூப்பிட்டு வாருங்கள்."

எதிரிலேயே ஒரு பெட்டிக் கடை மாதிரி மின் கருவிகள் வைத்து. வேலை பார்த்துவந்த சுப்பிரமணி யத்தை அழைத்து வந்தேன். சில மணி நேரத்தில் அந்த அறையில் ஒரு மின் விசிறி பொருத்தப்பட்டது. அது இன்றும் அவர் நினைவைச் சொல்லி எங்கள் விட்டுச் சாப்பாட்டு மேசைக்கு மேல் கிறீச்சிட்டுக் கொண்டிருக்கக் காணலாம்.

ஆசிரியர் கிட்டத்தட்ட ஒரு மாதம் போல் என் வீட்டில் வந்து தங்கி, என் கனக்குப் பிள்ளை மேசை யில் தரையில அமர்ந்து எழுதிக் கொண்டிருந்தார். அதே மேசையில் உட்கார்ந்துதான் இப்போது இந்தக் கட்டுரையை எழுதிக் கொண்டிருக்கிறேன்.

ஒண்டுக் குடித்தன வாழ்க்கை பற்றி அறிந்து, அதை எழுத்தில் கொண்டு வரத்தான் அவர் வந்து தங்கினார். அந்த எளிமையும் இனிமையும் தோழ மையும் நினைக்கும் போதெல்லாம் நெஞ்சை நெகிழ வைக்கின்றன.

## ஆசிரியருக்கு நான் செய்த கொடுமைகள்

ரஷ்ய குருஷ்சாவும் புல்கானினும் இங்கே சென்னை வலம் வந்து தரிசனம் கொடுத்தார்களே, நினைவிருக்கிறதா?

அந்தச் சமயம்தான், வருடம் நினைவில்லை, ஆசிரியர் ஒரு ரேடியோ நாடகம் எழுத ஒப்புக் கொண்டு, எழுத முடியாமல் தள்ளிக் கொண்டே போய் விட்டது. கடைசி நேரம். இன்னும் மூன்று நாட்களுக்குள் ஸ்கிரிப்ட் தந்தாக வேண்டிய நிர்பந்தம்.

"இங்கே இருந்தால். எழுத முடியாது. நாம் மகாபலிபுரம் போய் விடலாம்" என்றார்.

இது போன்ற நாடகம், தொடர் கதை போன்றவை அவர் சொல்லச் சொல்ல நான் எழுத்தில் முடிப்பது வழக்கம். அவர் ஆக்ஷனுடன் பாவம் பிடித்துக் கொச்சையில சொல்லிக் கொண்டு போகும் சரளம் அத்தனை நேர்த்தியாய் இருக்கும். அதை இலக்கண சுத்தமாய் எழுத்தில் மாற்றிக் கொள்வேன்.

மகாபலிபுரத்தில் ஸ்டேட் கெஸ்ட் ஹவுஸில் எங்களுக்கு ரூம் போடப்பட்டது. அந்த ரூமில் எங்க ளுக்கு முன்னால் தங்கியிருந்தவர்கள் குருஷ்சாவ், புல்கானின் என்றார்கள்.

தரை தெரியாத ரத்னக் கம்பள விரிப்பு, ஓரடிக்கு மேல் உயர்ந்து நிற்கும் நுரை ரப்பர் மெத்தை கட்டில். ஆடம்பரத் திரைச் சீலைகள், அலங்காரக் கலைப் பொருள்கள், சோபா, டீபாய் அமர்க்களம்.

அத்தனையும் எனக்கு பிரமிப்பு.

ஆசிரியர் சைவம் என்றதும் ஸ்டுவர்ட் நொந்து போனார். (சுவாமி சின்மயானந்தாவின் அறிமுகத்துக்கு முன்னர் ஆசிரியர் விரும்பி அசைவம் சாப்பிட்டுக் கொண்டிருந்ததார்) அவருக்காக இப்போது நானும் சைவம் சாப்பிடுவதாய்ச் சொன்னேன். அங்குள்ளவர்களுக்கு சைவச் சமையலே கை வரப் பெறாது என்று முதல் நாளன்றே தெரிந்து விட்டது.

ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டோம். அந்த நிலையில் என்னைப் பார்க்க அவருக்குச் சிரிப்பு வந்துவிட்டது. குபீரென்று சிரித்து, "வேண்டாம். அடுத்த வேளையிலிருந்து நீங்கள் அசைவத்துக்கே திரும்பிவிடுங்கள். எனக்காக நீங்களும் ஏன் சகிக்க முடியாத சாப்பாடு சாப்பிட வேண்டும்?" என்று சொன்னதோடு நில்லாமல், கட்டாயப்படுத்தி மாற்றிவிட்டார்கள். (அப்புறம் வேறு சில தவிர்க்க முடியாத காரணங்களால் நான் சைவனாகி விட்டேன்.)

பகலெல்லாம் எழுத்துப் பணி.

விருந்தினர் மாளிகை கடலோரம். பனிக் காலம். அசாதாரணக் குளிர். அறைக்குள் எல்லா ஜன்னல்களையும் - நான் டாய்லெட் போயிருந்த சமயம் - ஆசிரியர் மூடிவிட்டார்.

எல்லா ஜன்னல்களும் அடைத்திருப்பதைப் பார்த்து எனக்கு ஒரு மாதிரியாக ஆகிவிட்டது.

"சார், கொஞ்சமாவது காற்று வந்து போக வழி இல்லாமல் எல்லாத்தையும் அடைச்சிட்டா எப்படி..." என்றேன் முணுமுணுவென்று.

கொஞ்சம்தான் திறந்தேன். படீரென்று பனி முகத்தில் அறைந்தது. நான் அது பற்றிக் கவலைப்பட வில்லை. காற்று ரொம்ப முக்கியமில்லையா?

ஆசிரியர் அவர் கட்டிலில் படுத்துக் கொண்டாயிற்று. தலை மாட்டில் உள்ள மின் விளக்கை மட்டும் தட்டி விட்டுக் கொண்டு ஆசிரியர் படித்துக் கொண்டிருந்தார்.

நான் என் கட்டிலில் ஏறிப் படுத்தேன். அப்படியே அந்த நுரைமெத்தை என்னை உள்வாங்கிக் கொண்டது. அப்படிப் புரண்டால் செல்லமாய்த் தாலாட்டுகிறது. மேட்டுக் குடியினர், உல்லாசவாசி களின் சொகுசுப் படுக்கை. காட்டான் மோட்டானான எனக்க அது சரிப்பட்டு வரவில்லை. தூக்கம் வருவேனா என்றது.

திரும்பிப் பார்த்தேன். ஆசிரியர் விளக்கை அணைத்துவிட்டு இமை மூடிவிட்டார். ஆழ்ந்த உறக்கம்.

அந்தச் சொகுசுக் கட்டில் எனக்குப் பெரிய இம்சையாய் இருந்தது. கட்டிலை விட்டு மெள்ளக் கீழிறங்கினேன். தரை விரிப்பாய் இருந்த கம்பளத்தில் தலையணை வைத்து நீட்டிப்படுத்து இழுத்துப் போர்த்துக் கொண்டேன். அப்புறம் என்ன ஆயிற் றென்று தெரியவில்லை. செமத்தியான தூக்கம்.

அழைப்பு மணியோசை கேட்டுக் கண் விழித்தேன். நன்கு விடிந்து விட்டது. குளியலறையில் ஆசிரியர் பல் துலக்கும் ஓசை கேட்டது. வாசல் கதவு திறந்தேன். வெள்ளாடை ஸ்டூவார்ட் குல்லாய் மூடிய

ஜாடிகள் இரண்டு நீட்டினார். ஆசிரியருக்குப் பால்; எனக்கு பெட் காப்பி.

"முன்னாடியே எந்திரிச்சிட்டீங்க போலி ருக்கு?" எனக்கு வெட்கமாய் இருந்தது.

அவர் சிரித்துக் கொண்டு, "உங்களுக்கு நல்ல தூக்கம் இல்லே?" என்றார்.

அங்கு தங்கியிருந்த மூன்று நாட்களும் எங்கள் அன்றாட நடைமுறைகள் ஏறக்குறைய இதே மாதிரி தான்.

போன காரியம் வெற்றிகரமாய் முடிந்தது என்ற திருப்தியுடன் சென்னை திரும்பினோம்.

பின்னாளில் இநத அனுபவத்தை அவர் ரா.கி.ர., ஜ.ரா.சு விடம் சொல்லி ரசித்துச் சிரித்த விதம் இருக்கிறதே, இன்னும் காதில் ஒலிக்கிறது.

"மகாபலிபுரம் கெஸ்ட் ஹவுஸ்லே இந்த மனுஷனுக்கு வாழ்க்கைப்பட்டு நான் என்ன மாதிரி கொடுமையெல்லாம் அனுபவிச்சேன் தெரியுமா?" என்று கேட்டுவிட்டு அவர் ஒவ்வொன்றாய்ச் சொன்ன போதுதான் என்னை ஒரு பொருட்டாக மதித்து, எத்தனை தன்னல மறுப்பாய் நடந்து கொண்டி ருக்கிறார் என்று நினைத்து நெகிழ்ந்து போனேன்.

"எல்லாக் கதவையும் சாத்திட்டா, மூச்சடைச்சு செத்துப் போவாராம். கதவைக் கொஞ்சம் திறந்தாலும் குளிர் பிச்சுக்குது, கொடூரம்."

"திடீர்னு முழிப்பு வந்துட்டது. ஏன்னு பார்த்தா சிங்கம், புலி எல்லாம் உறுமற மாதிரி சத்தம்! அப்படியொரு குறட்டை, என்ன பண்ண முடியும்?"

"காலையிலே பார்த்தால் கட்டில்ல ஆளைக் காணோம், கீழே பார்த்தா என்னமோ மாதிரியாப் படுத்திருக்கார்".

"ஏதோ எக்ஸர்ஸைஸ் பண்றார்னு பார்த்தா, ஆனந்தமா மறுபடியும் குறட்டை."

— இப்படியெல்லாம் கேலி செய்தார் ஆசிரியர்.

"அதெல்லாம் நீங்க அங்கேயே சொல்லி யிருக்க வேண்டியதுதானே" என்று ஆற்றமாட்டாமல் சொன்னேன்.

"சண்டைக்கு வரார் பாருங்க" என்று கூறிச் சிரித்தார்.

**இரண்டாண்டு இடைவெளி**

நான் முதலில் ஓய்வு பெற்று 88 வாக்கில் வெளிவந்து விட்டேன். அப்போதும் வெள்ளிக் கிழமை பிரார்த்தனையின் போது ஆபீஸ் சென்று ஆசிரியரைச் சந்திக்கத் தவறியதில்லை.

பிறகு 90ல் ஜ. ரா, சுந்தரேசன் ஓய்வு பெற்ற பிறகு, அவரிடமே ஆசிரியர் அவர்கள் என்னைத் திரும்ப வரும்படி அழைத்திருந்தார். இறுதிவரை ஆசிரியருக்கு என்னால் இயன்ற அளவில் துணை நின்றது அவருக்கு எனது நன்றிக் கடனைச் செலுத்தியது மனசுக்கு நிறைவைத் தருகிறது.

**நன்றி : மேகலா**

## 2

**நா**ன் திருமணம் முடித்துக் கொண்டு - உறவிலே பெண் - திரும்பி வந்து தமிழ்வாணனைப் பார்க்கக் குமுதம் அலுவலகம் சென்றேன்.

சிந்தாதிரிப் பேட்டை அருணாசல நாயக்கர் தெருவிலிருந்த குமுதம் அலுவலகம், இப்போதுள்ள கெல்லீஸ் கட்டிடத்துக்குப் பெயர்ந்த வேளை அது.

தமிழ்வாணனின் உதவியாளராக, கல்கண்டு துணையாசிரியராக, அப்போது ரா.கி. ரங்கராஜன் இருந்தார்.

ஆசிரியரும், துணையாசிரியரும் 'வா, போ' என்று ஒருமையில் பேசிக் கொள்வது வேடிக்கையாக இருக்கும். விசாரித்தபோது தெரிந்தது, இங்கு வருமுன்னர் இருவரும் 'சக்தி' பத்திரிகையில் ஒன்றாகப் பணியாற்றியவர்கள் என்று! ரா.கி.ர. அப்போதெல்லாம் கொஞ்சம் 'ரிசர்வ்டு டைப்' அவரிடம் பேசுவதற்கு எனக்கு கூச்சமாய் இருக்கும்.

தமிழ்வாணனுக்கு அடுத்த சீட் ரா.கி.ர.,வுடையது. நான் போயிருந்த சமயம் அந்த சீட் காலியாக இருந்தது. 'ரங்கராஜன் சார் வரலியா?' என்று தமிழ்வாணனிடம் கேட்டேன்.

'அவர் இனி இங்க வரமாட்டார். நீ போய் உட்கார்," என்றார் த.வா.

என் காதுகளை என்னால் நம்ப முடிய வில்லை. தெளிவாக மீண்டும் கேட்டு உறுதிபடுத்திக் கொண்டு, அந்த நாற்காலியில் உட்கார்ந்தேன்.

மணியடித்து, ஆபீஸ் பையனை வரவழைத்து, 'அட்டெண்டன்ஸ் ரிஜிஸ்தரைக் கொண்டா,' என்றார்.

பையன் ரிஜிஸ்தரைக் கொண்டு வந்து என் முன் பிரித்து வைத்தான். என் கண்களை என்னால் நம்ப முடியவில்லை. 1952, ஜூன் மாத ஆரம்பத்திலேயே என் பெயர் பதிவாகியிருந்தது. நான் இரண்டாவது வாரம்தான் சேர்ந்தேன்.

சற்றுப் பொறுத்து, 'சரி, வா, முதலாளியைப் பார்த்து விட்டு வரலாம், 'என்று கூட்டிப் போனார்.

அப்போதுதான் நான் முதன் முதலாக ஆசிரியர் எஸ்.ஏ.பி., அவர்களை நேருக்கு. நேர் நெருக் கத்தில் பார்த்தது, ஏதோ காலங்காலமாய் உடனிருந்து பழகியவரைப் போன்ற அன்னியோன் னியத்துடன் அவர் புன்னகைத்துக் கை குலுக்கியபோது, சிலிர்த்துப் போனேன், 'தமிழ்வாணன் உங்களைப் பற்றிச் சொன்னார், நல்லா செய்யுங்க. செய்வீங்கன்னு நம்பிக்கை இருக்கு.' என்றார்.

அதற்கு மேல் அங்கு இருக்கத் தேவையில்லை என்ற பாவனையில் தமிழ்வாணன் என்னை ஜாடை யாக நோக்கித் தலையசைத்தார், நானும் எழுந்து கொண்டேன். அவருடன் வெளி நடந்தேன்.

அப்போது எனக்குப் பத்திரிகைத் துறையில் முன் அனுபவம் என்று சொல்லப் போனால், பள்ளிப் படிப்பு முடித்த கையோடு வந்த தேர்தலுக்கான ஓட்டர் லிஸ்ட் ப்ரூப் பார்த்த அனுபவம்தான். தாலுகா

ஆபீசில் ஓய்வு பெற்ற தாசில்தார் முனுசாமி முதலியார் ப்ரூப் திருத்த நல்ல பயிற்சி அளித்திருந்தார். அதுவே பெரிய தகுதி போல் த.வா.,பாராட்டினார்.

மற்றப்படி பத்திரிகை தயாரிக்கத் தேவையான அத்தனை அறிவுக்கும் அஸ்திவாரம் போட்டவர் தமிழ் வாணன்தான்.

## குமுதம் நாற்காலி

தமிழ்வாணனிடம் பயிற்சி பெற்றுப் பிறகு குமுதத்துக்கு வந்தால், தன் பளு ஓரளவு குறையும் என்ற ஆசிரியர் எஸ்.ஏ.பி. கருதினார்.

குமுதம் மாதம் மூன்று இதழாக வந்து கொண்டிருந்தது. அப்போது.

ஆசிரியருக்கு முழு நேரத் துணையாசிரியராய் ரா.கி.ர., பணியாற்றினாலும், ரிசர்வ் வங்கியில் பணி புரிந்த ஆனந்த தீர்த்தனும், வக்கீலாய் இருந்த ராம. நாராயணனும், இருவரும் பகுதி நேரத் துணைகளாய் இருந்து வந்தனர்.

ஜ.ரா. சுந்தரேசன் நான் குடியிருந்த வெள்ளாளர் தெருவிலேயே ஓர் அறையில் தங்கி ரேடியோ அஸெம்பிளிங் கம்பெனி ஒன்றில் வேலை பார்த்து வந்தார், கல்கண்டுக்குக் கதைகள், நாடகங்கள் எழுதி வந்தார். அதனால், எனக்கு அவருடைய பரிச்சயம் ஏற்பட்டது. இருவரும் ஒரே ஜில்லாக்காரர் கள் என்பதால் பாசம் சுரக்க, 'டா' உறவில் பழக ஆரம்பித்தோம். இன்று வரை அது நீடிப்பது வேறு விஷயம்.

குமுதத்தில் '53 வாக்கில் ஒரு சிறுகதைப் போட்டி வைத்திருந்தார்கள். அந்தப் போட்டியில் ஜ.ரா.சு., கலந்து கொண்டார். பரிசு பெற்றார். அலுவலகத்துக்கு ஜ.ரா.சு. வரப்போக, ஆசிரியர் அவரைக் கவனித்திருந்திருக்கிறார். அவரது எழுத்தும் பிடித்துப் போயிற்று. தமிழ்வாணனிடம் சொல்லி விட்டுக் குமுதத்தில் இணைத்துக் கொண்டார்.

என்னதான் கல்கண்டில் 'தேசபந்து'வாகக் கொட்டி முழக்கினாலும், பெரியவர்களுக்கு எழுத வேண்டும், காதல் கதைகள் தரவேண்டும் என்ற ஏக்கம் எனக்கு உள்ளூர இருந்து வந்தது.

நான் கொஞ்சம் வெள்ளை. எதையும் மனசுக்குள் மறைத்து வைக்கத் தெரியாதவன். பட்டதைப் பட்டென்று சொல்லி, கேட்டு, கண்டித்துப் பலரின் வெறுப்புக்கு ஆளான அனுபவம் உண்டு.

அப்படித்தான் ஆசிரியரிடம் நேரில் சென்று, 'எனக்கு எப்போது ப்ரொமோஷன்? எனக்கும் குமுதத்தில் இடம் வேணும்,' என்று கேட்டுவிட்டேன்.

அப்புறம் எனக்கும் ஒருவழியாய் குமுதத்தில் துணையாசிரியர் நாற்காலி போடப்பட்டது.

நானும், சுந்தரேசனும் ஏதும் பிரச்சனை கிளப்பா விட்டாலும், எங்களை வைத்துக் கொண்டு ஆசிரியரும், ரா.கி.ர.,வும் சிண்டு முடியும் தோரணை யில் கலாட்டா செய்வது வேடிக்கையாய் இருக்கும்.

'சீனியர் ஜ.ரா.சு., என்ன சொல்றார்?' என்பார் ரங்கராஜன்.

'அதெப்படி? குமுதம் ஆபிஸ்ல முதல்ல சேர்ந்தவர் புனிதன்தானே? அதனால அவர் தான் சீனியர்,' என்று வக்காலத்து வாங்குவார் ஆசிரியர்.

இது பல சந்தர்ப்பங்களில் பலவித சீண்டல்களாய் வெளிவரும்.

## நாம் மூவர்

அன்றைய குமுதம் ஆசிரியர் எஸ்.ஏ.பி அமர்வதற்கு, ரா.கி. ரங்கராஜன், புனிதன், ஜ.ரா. சுந்தரேசன் ஆகிய நாங்கள் மூவரும் முக்காலி யானோம். முக்காலியில் எந்தக் காலுக்குப் பொறுப்புக் குறைச்சல்?

வெளியுலகத்தில் குறைந்த சர்குலேஷன் உள்ள பத்திரிகைகளில் எல்லாம் அத்தனை பேர் ஆசிரியர் குழுவில் இடம்பெற்று, தனித்தனி அறைகள், எடுபிடிகள், ஆளம்புகள் என்று அமர்க்களப்படும் போது, இங்கு ஒரே ஓர் ஹாலில் மூன்று மேசை நாற்காலியைப் போட்டுக் கொண்டு மூன்று பேர் உட்கார்ந்து கொண்டு, எந்தவித ஆர்ப்பாட்டமும் இல்லாமல், இந்தியாவிலேயே அதிக வினியோகம் உள்ள பத்திரிகை என்று பாராளுமன்றத்திலேயே சுட்டிக் காட்டும் அளவுக்கு எப்படிக் கொண்டு செலுத்த முடிந்தது?

முதல் காரணம் ஆசிரியர் வியத்தகு மேதையாய் இருந்து, வேறு எவருக்கும் கட்டுப்படத் தேவை இல்லாத உரிமையாளராகவும் அமைந்தது. கால நேரம், சொந்த விருப்பு வெறுப்பு, உடலுபாதை ஏதும் பொருட்படுத்தாமல் ஆசிரியரின் எண்ணத்தை ஈடேற்றி வைப்பதே குறிக்கோளாய்க் கொண்டு,

பாடுபட்டு உழைத்தோமே நாங்கள் மூவர், அது இரண்டாவது காரணம்.

ஆசிரியரின் கூர்த்த மதியாகட்டும், அவரது படிப்பறிவாகட்டும், அனுபவங்களைக் கிரகித்துச் சொல்லும் நுணுக்கமாகட்டும், இந்தக் காரணத்தால் இது இப்படித்தான் நடக்கும் என்று அறுதியிட்டுச் சொல்லும் கணிப்பாகட்டும், அவருக்கு முன்னால், நாங்கள் சிசுக்கள்தான், ஆனால், இத்தனையும் எங்களுக்கு இருப்பது போல், அவர் எங்களுக்குள் புகுந்து ஒரு வித்யா கர்வத்தை, செயலாற்றும் வல்லமையை, எதிர் கொள்ளும் துணிச்சலை ஏற்படுத்தி விட்டாரே, அந்த வித்தையை - அவருக்கு மட்டுமே கைவரப்பெற்ற வித்தையை எண்ணிப் பிரமிக்காமல் இருக்க முடியவில்லை.

எப்படிச் சாதித்தார்?

முதலில், 'உங்களுக்கு எந்தக் குழப்பமும் வேண்டாம். நான் வழிகாட்டுகிறேன். நீங்கள் சும்மா என் பின்னால் வந்தால் போதும்,' என்ற நம்பிக்கையை ஏற்படுத்தினார். அதுவே, எங்களுக்குச் சுமையேதும் இல்லை என்று எண்ண வைத்து லேசாக்கியது.

ஓர் இதழை ஒருவர் கவனித்தால் போதும், மற்ற இருவரும் இதழ் பொறுப்பிலிருந்து விடுபட்டு மற்ற வேலையைக் கவனிக்கலாம் என்று கழற்றி விட்டு விட்டார். இதனால் ஒரு வாரம் பணியாற்றினால், இரண்டு வாரம் ஓய்வு என்ற பிரமையில், அந்த ஒரு வார வேலையில் முனைப்பாக ஈடுபட எங்களுக்கு ஒரு தார்மீக உந்து சக்தி பிறந்தது. ஈடுபட்டோம்.

அவர் வைசியர். எங்களை முழுமையாகப் பயன்படுத்திக் கொண்டார். எவரிடம் எந்தத் திறன் ஒளிந்திருக்கிறது என்பதைக் கண்டுபிடித்து, வெளிக் கொணர்வதில், அவருக்கு இணையாக இன்னொருவரைச் சுட்டிக் காட்ட இயலவில்லை.

தினமும் காலையில் வந்ததும், ஒரு 'பெப்டாக்' கொடுப்பார். அதிலே பத்திரிகை பற்றிய கனவுகளை விதைப்பார். அவற்றை நனவாக்க வேண்டும் என்ற ஆவலை, நிறைவேற்றிப் பார்க்க வேண்டும் என்ற வேகத்தை ஏற்படுத்தும் வகையில் சொல்வார்.

இவை எல்லாவற்றுக்கும் மேல் அவருக்குப் பிடித்த மாதிரியில் நாங்கள் ஏதாவது எழுதி முடித்தால், தட்டிக் கொடுத்து மனசாரப் பாராட்டிப் புகழ்ந்ததையெல்லாம் எப்படி மறக்க முடியும்? இன்று வரை நினைத்துப் பெருமிதப்பட வைக்கிறது.

இந்த இடத்தில் எனக்கு நேர்ந்த அனுபவத்தை மட்டும்தான் என்னால் தர முடியும். இதுதான் அந்தக் காலத்துக் குமுதம் என்று எனக்குத் தோன்றுகிறது. இதோ சில அனுபவங்கள்:

**மக்கள் படப்பிடிப்பு**

இதழ் முடித்த நேரத்தில் ஒரு விச்ராந்தி முகத்தில் தெரியும். அதை 'விடாயாற்றி உற்சவம்' என்று வேடிக்கையாய்க் குறிப்பிட்டுச் சிரிப்பார் ஆசிரியர்

இந்த உற்சவம் எங்களுக்கு மட்டும் தானே தவிர, ஒவ்வோர் இதழிலும் அவருடைய முத்திரை தெரியும்படி தனிப்பட அவர் படும்பாடு ஏதும்

எங்களுக்குத் தெரியாது, தெரியாதவாறு மறைத்துக் கொள்வார்.

அந்த ஓய்வு நாட்களில் எங்களுக்கு நோகாமல் அப்படியொரு பயிற்சி கொடுப்பார். படிப்பறிவுப் பயிற்சி. எனக்கு ஸ்டீன்பெக், பி.ஜி. உட்ஹவுஸ், ஓ ஹென்றி சிறுகதைகள் அவரது நூலகத்திலிருந்து எடுத்துக் கொடுப்பார். இவற்றை ஆபீஸ் நேரத்திலேயே - மாடியில் மீட்டிங் ஹாலில் உட்கார்ந்து படிக்க வேண்டும். அடுத்த நாள் அதில் ரசித்த கட்டங்களைச் சொல்லி, எந்த எழுத்து முறையால் அது எடுபடுகிறது என்று சுட்டிக் காட்டி ஒரு விவாதம் நடக்கும். அடுத்து எழுதும் கதையில் அந்த உத்தி கையாளப்பட வேண்டும்.

இதோடு நிறுத்தாமல் வெளியுலகத் தொடர்பு தேவை என்று இன்னொரு நாள் ஊர்சுற்ற அனுப்புவார். ‘வெறுமனே சுற்றிப் பார்த்து நமக்கு என்ன ஆச்சு? ஏதாவது வித்தியாசமான மக்களைக் கவனியுங்கள். அவரை பேட்டி, எடுங்கள், படம் எடுத்து வர ஏற்பாடு செய்யுங்கள். இரண்டொரு பக்கம் போடலாம்,’ என்றார். ‘மக்கள்’ என்று அந்தப் பகுதிக்குப் பெயர்.

பேட்டி முடிந்த பிறகு, படம் எடுப்பதற்காக அப்புறமாய் ஒரு போட்டோகிராபரைப் பிடித்து அனுப்பி, நேரத்துக்குக் கிடைக்காமல் அவஸ்தைப் பட்ட முன் அனுபவம் எனக்கு இருந்தது.

அப்போது எனது நண்பர் ஒருவர் யாஷிகா கேமரா ஒன்று எனக்காக சிங்கப்பூரிலிருந்து வாங்கி வந்து கொடுத்தார். நான் அதற்கு முன் படம்

எடுத்ததில்லை. யாஷிகா கிடைத்ததும், உற்சாகம் பிய்த்துக் கொண்டது. தோளில் காமெராவை மாட்டிக் கொண்டு, தென் சென்னைப் பகுதியில் சுற்றினேன். சினிமாத் தொழிலாளர்களின் குடிசைக் குடியிருப்புப் பகுதியிலே ஒரு போர்டு கண்ணில் பட்டது.

'இங்கே பாம்புகள் படப்பிடிப்புக்கு வாடகைக்கு விடப்படும்.

முதலில் அந்த போர்டைப் படம் எடுத்த பிறகு உள்ளே இருப்பவரை அழைத்தேன். தெருவில் வித்தை காட்டும் மோடி மஸ்தான் மாதிரி இருந்தார், நான் என்னை அறிமுகப்படுத்திக் கொண்டேன். அவரைப் பற்றிப் பத்திரிகையில் வரும் என்றதும் உற்சாகமானார்.

'நம்ம பச்சா கூடப் பாம்பு புடிப்பான் சார்!' என்றார்.

இப்போது அவரது உற்சாகம் என்னைத் தொற்றிக் கொண்டது. 'கூப்பிடு, கூப்பிடு.' என்று காமெரா விரித்தேன்.

மூன்று வயதுதான் இருக்கும் அந்தச் சிறுவனுக்கு. சும்மா 'கொழுக் மொழுக்'கென்று இருந்தான். பாவா ஒரு பெரிய நல்ல பாம்பு ஒன்றை அவன் கையில் கொடுத்தார் எனக்கே பயம். அவர், 'விஷப் பை எடுத்தாச்சு சார். பயப்படாதே.' என்றார்.

பையன் பாம்பைத் தூக்கிப் பிடித்தான். அப்போதுதான் அந்த விபரீதம் நிகழ்ந்தது. பாம்பை இறக்கி விட்டானோ என்னவோ! பையன் கன்னத்தில் ஓங்கி ஒரு போடு போட்ட அதே தருணம், என் காமெரா 'கிளிக்' செய்து விட்டது.

பிரிண்ட் போட்டுப் பார்த்தால், அந்த உயிர்த் துடிப்பான காட்சி அந்தி வெளிச்சத்தில் காண்ட் ராஸ்ட்டாய் அற்புதமாய் வந்திருந்தது. ஆசிரியர் அதைப் பார்த்து அடைந்த சந்தோஷம்! நண்பர்கள், ஓவியர் வர்ணம் அனைவரையும் கூப்பிட்டுக் காட்டிப் பாராட்டி 'யார் எடுத்தது தெரியுமா? நம்ம கார்ஷ் ஆப் ஒட்டாவா,' என்றது நேற்றுப் போல் இருந்தது.

அந்தத் தெம்பிலே குமுதம் அட்டைக்காகவும் நான் அவ்வப்போது வண்ணப் படங்கள் எடுத்தேன். 'தணிகை' என்ற பெயரில் அவை அன்றைய குமுதம் இதழ்களில் இடம் பெற்றன.

**சுந்தர பாகவதர் ஆனேன்**

நாங்கள் மூவரும் கட்டாயம் ஆளுக்கு ஒரு கதை ஒவ்வோர் இதழுக்கும் எழுதியாக வேண்டும். எல்லாரும் எல்லாவிதமான கதையும் எழுத வேண்டும்.

மொத்தம் ஐந்து கதைகள் ஒவ்வோர் இதழிலும் இடம்பெறும். ஒவ்வொன்று ஒவ்வொரு ரசம். நகைச்சுவை, கிராமம், இளைமைத் துள்ளல், க்ரைம், விஞ்ஞானம் — பெரும்பாலும் காதல் ரசம் தூக்கல். இந்த ஐந்து கதைகளில் இரண்டு கதைகள் மட்டுமே வெளியாருக்கு ஒதுக்கியது. மற்ற மூன்றும் நாங்கள். இந்த இதழுக்கு எழுதிய கதை வகை, அடுத்த இதழுக்கு எழுதலாகாது. நாங்கள் எழுத வேண்டிய கதைக் கரு வைக் கையகலச் சீட்டில் எழுதிக் கொடுத்து 'அப்ரூவல்' பெற்றுக் கொண்ட பிறகு. அதை ஆசிரியர் அவர்களுடன் பேசி விளக்கம் பெற்று, எந்த உத்தியில் எழுதுவது என்று தீர்மானித்து, பிறகே எழுத வேண்டும். 'இது நம்ம பத்திரிகை, நமக்குப் பிடிச்ச கதையை

நாமதான் எழுதணும், நம்மால தான் எழுத முடியும்.' என்று சொல்லி, 'குமுதமான கதைகள்' என்றே அறிவிப்புக் கொடுத்தார்.

ஒருமுறை என் பங்காக நகைச்சுவைக் கதை எழுத வேண்டும். ஆசிரியருடன் பேசி முடித்துக் கதை உருவாக்கியாயிற்று. என்ன உத்தியில் எழுதுவது? அன்று காலை ஒரு காலட்சேபம் பற்றி விரிவாக அவரிடம் பேசிக் கொண்டிருந்தேன். அதை நினை வூட்டி, அதே காலட்சேப உத்தியில் எழுதும்படி சொல்லிவிட்டார். கதைப் பிரதியை அவர் படித்த பிறகுதான் அச்சுக்கு அனுப்புவது வழக்கம். அவர் ஊருக்குக் கிளம்ப வேண்டியிருந்ததால், 'நான் பார்க்க வேண்டியதில்லை, கம்போசுக்கு அனுப்பி விடுங்கள், வந்து பார்த்துக் கொள்கிறேன்.' என்று சொல்லி விட்டுப் போய்விட்டார். நாளை மறுநாள் வருவதாய்ச் சொல்லியிருந்தார்.

நானும் எழுதி அனுப்பி விட்டேன். 'மீசா புராணம்' என்பது கதைப் பெயர். மனசுக்குள் 'பக் பக்'தான். அவர் நினைத்தபடி கதை இல்லாவிட்டால், நிர்தாட்சண்யமாய் நிறுத்தி விடுவார். நாளை, மறுதினம் தான் பேஜ் தயாராகும். எப்படியும் மெஷின் புரூப் பார்க்க வந்து விடுவார். என்ன ஆகுமோ என்று பயந்து கொண்டிருந்தேன். இரவு போயிருந்திருக்கும்.

அன்று நான் ஆபீஸ் போனபோது, என்னைப் பார்த்து ஒரேயடியாய்ச் சிரித்தார். 'நல்லாருந்தது. நடுநடுவே இந்த ஸ்டைல்ல கதை எழுதுங்க,' என்றார்.

இந்த மாதிரிக் கதைகளுக்காக 'சுந்தர பாகவதர்' என்று நாமகரணம் சூட்டிக் கொள்ளப் பெயர் கொடுத்தவர், சீனியர் ரா.கி.ர.தான்.

'எங்களுக்கு எதற்கு நகை?' என்று ஒரு சுந்தர பாகவதர் கதை, பேசிப் பேசி எழுதியதில் நீண்டு, அடுத்த இதழில் முடித்து விடலாம் என்று சொல்லி, அதிலும் முடியாமல் கட்டாயம் அடுத்த இதழில் முடியும் என்று அறிவித்து... இப்படித் தொடர்ந்து ஐந்து இதழுக்கு நீண்டது.

வெள்ளாளத் தெருவில் குடியிருக்கும் போது, அதே தெருவில் வசித்த நடிகர் வி.எஸ்.ராகவன் எனக்கும் சுந்தரேசனுக்கும் பழக்கமானவர்தான். அவர் ஒருநாள் ஆபீஸ் வந்து, சுந்தரேசன் எதிரில் உட்கார்ந்து, அவர் கதையை நாடகமாக்கப் போவதாகக் கேட்டு ரொம்ப நேரம் பேசிக் கொண்டிருந்தார்.

எந்தக் கதை என்று சந்தரேசன் கேட்ட போது, 'சுந்தர பாகவதர்னுட்டு எழுதினா கண்டுபிடிக்க முடியாதுன்னு நினைச்சேளாக்கும்? அதான், எங்களுக்கு எதற்கு நகை?' என்றதும் சுந்தரேசன் சிரித்தார்.

அதை எழுதியது நான்தான் என்று அறிந்த போது, வி.எஸ். ராகவன் நம்பவில்லை. அப்புறம் உறுதி செய்து கொண்டு ஒருவிதமாய் கதை வாங்கிச் சென்று, 'நகையே, உனக்கொரு நமஸ்காரம்!' என்ற பெயரில் நாடகமாக்கி மேடையேற்றி, எம்.ஜி.ஆர் கையால் எனக்குக் கேடயம் வாங்கித் தந்தார். வானொலியில் தொடர் நாடகமாய் அது இடம் பெற்றது. அப்புறம் தொலைக் காட்சி நாடகமாகவும் இடம் பெற்றது.

என்னை உசுப்பி விட்டு ஒரு சவால் உணர்வை ஏற்படுத்தி, சுந்தர பாகவதர் ஆக்கியது, ஆசிரியரின் வெற்றி என்றுதான் எனக்குத் தோன்றுகிறது.

## கவிதையிலே கதை

குமுதத்தில் இணைகையில் நான் வித்துவான் தேர்வு முதலாண்டு எழுதியிருந்தேன். தனியாகப் படித்து வித்துவான் பட்டம் பெற ஆவல். இந்த ஏக்கத்தை ஆசிரியரிடம் சொன்னேன்.

அவர் சற்றுப் பதறிப்போய், 'வேண்டாம் வேண்டாம். பத்திரிகைக்கு உங்கள் தமிழறிவே அதிகம். இதற்கு மேல் வேண்டாம். ஆங்கிலத்தில் ஆர்வம் காட்டுங்கள்,' என்று அறிவுரை வழங்கியதோடு, 'உங்களுக்கென்ன, கவிதை எழுதணும். அவ்வளவு தானே? நடுநடுவே எழுதுங்க,' என்று சமாதானம் செய்தார்.

அதன்படி, 'கண்ணம்மா' என்ற பெயரில், மரபுக் கவிதைகளாய் அவ்வப்போது (அறுபதுகளில்) எழுதி வந்தேன். ஒரு முறை கதையென்று பேசும்போது, 'இது கொஞ்சம் கவிதைத்தனமா இருக்கே. கவிதை யிலே எழுதிப் பாருங்களேன்,' என்றார்.

பாரதிதாசனின் 'பாண்டியன் பரிசு' 'எதிர் பாராத முத்தம்' போன்ற கதைக் கவிதைகள் என்னைக் கவர்ந்தவை. அந்தத் தூண்டுதலில் நானும் ஒரு கவிதைத் கதை தயாரித்தேன்.

பாராட்டி வெளியிட்டார். அதன் பிறகு தான் பகுதி நேரக் கவிஞனின் கவிதைக் கதையே இந்த அளவுக்கு இருக்கும் போது, முழுநேரக் கவிஞரைக் கொண்டு கவிதைக் கதை செய்யச் சொன்னால், இன்னும் சிறப்பாய் இருக்குமே என்று ஆசிரியருக்குத் தோன்றியிருக்கும் போலும்.

கவிஞர் சுரதாவை எழுதித் தருமாறு கேட்டுக் கொண்டார். மாடியிலேயே கவிஞர் சுரதா மீட்டிங் ஹாலில் அமர்ந்து அந்தக் கதைக் கவிதை எழுதித் தர, குமுதத்தில் அது இடம்பெற்றது பசுமை நினைவு.

## பொள்ளாச்சியில் புனிதன்

ஒருமுறை நா. மகாலிங்கம் அவர்கள் பொள்ளாச்சியில் விவேகானந்தர் விழா நடத்தினார். அதில் 'சென்னையிலிருந்து கி.வா.ஜ.வுடன் ஆசிரியரையும் அழைத்திருந்தார். அப்போதெல்லாம் பொதுக் கூட்டங்களில் அவர் பேசுவதுண்டு. பேச்சுக்காக அவர் மெனக்கெட்டு ஆயத்தம் செய்து கொள்வதை பார்க்கும் போது இத்தனை மெனக்கெடல் தேவையா என்று தோன்றும்.

அப்படி அவர் பொள்ளாச்சி சென்று வந்த பிறகு, அங்கு நிகழ்ந்த ஒரு சம்பவத்தைக் கூறினார், நினைவு கூர்ந்து, கூடுமானவரை அவர் வார்த்தையிலேயே தருகிறேன்:

நான் மேடையிலே உட்கார்ந்திருக்கிறேன், பக்கத்திலேயே, அந்தக் காலேஜ் பிரின்சிபால் உட்கார்ந் திருந்தார்.

அவர் என் காதுகிட்ட வந்து, 'இப்ப உங்க புனிதன் வரப் போறார்,' என்றார்.

நான், 'வரமாட்டார்,' என்றேன்.

'ஏன் அப்படிச் சொல்றிங்க? நான் இங்க வர்றதுக்கு முன்னால அவரைப் பார்த்தேன். பின்னாலயே வரதா சொன்னாரே,' ன்னார்

நான், 'பார்த்திருக்க முடியாது, ஏன்னா, நான் ரயில் ஏர்றப்ப புனிதன்தான் ஸ்டேஷனுக்கு வந்து வழியனுப்பிச்சார். என்கிட்ட சொல்லாம அவர் எப்படி வர முடியும்? புனிதன் எங்க சப்

எடிட்டராச்சே!'ன்னதும், அவர் முகம் ஒருமாதிரியாயிடுச்சு.

'எனக்கு அப்பவே சந்தேகம்தான்னு சொன்னார்.' விஷயம் என்னன்னா—

அவங்க காலேஜ் ஸ்டாஃபாம் அந்த ஆள், தான்தான் புனிதன்னு சொல்லிக் கிட்டு குமுதத்திலே வர்ற கதையை எடுத்து வச்சிட்டு அதைத் தான் எப்படி எழுதினேன், இன்ஸ்பிரேஷன் எது, காரெக்டர் எப்படி உருவாச்சுன்னெல்லாம் லெக்சர் வேற கொடுப்பாராம். எப்படியிருக்கு?

இதை ஆசிரியர் என்னிடம் சிரிக்கச் சிரிக்கச் சொன்னார். இதன்பிறகு யாராவது புனிதன் என்று சொன்னால், 'யாரு, பொள்ளாச்சி புனிதனா?' என்று கிண்டலடிப்பார்.

## சொல்லச் சொல்ல எழுதுவேன்

அந்த நாளில் ஆசிரியரின் நாவல்கள் - குறிப்பாக 'ஓவியம்' - அவர் சொல்லச் சொல்ல நான்தான் பிரதியெடுப்பது வழக்கம்.

அவர் வீட்டுக்கு அழைக்கிறார் என்றால், பெரும்பாலும் எழுதுவதற்காகத்தான் இருக்கும். நீண்ட கைப்பிடியில் பலகை வைத்து, சாய்ந்து உட்கார்ந்து எழுதுவதற்கென்றே டிஸைன் செய்த அந்தப் பிரம்பு நாற்காலியில்தான். அவர் வீட்டில் என்னைப் பார்க்க லாம்.

அவர் டிக்டேட் செய்யும் அழகே அழகு! நடமாடிக் கொண்டு, நடித்துக் கொண்டு கொச்சை யாய் அவர் பேசுவதை நான் இலக்கண சுத்தமாய் எழுதி விடுவேன் என்ற அவரது நம்பிக்கையை இறுதி வரை காப்பாற்றி விட்டேன்.

நான் முறைப்படி 1988ல் ஓய்வு பெற வேண்டியிருந்தது. இருந்தும், ரா.கி.ர.வைப் போலவே நானும் தொடர்ந்து பணியாற்றிக் கொண்டிருந்தேன்.

## முதல் ரிடையர்மெண்ட்

அந்த நேரத்தில் குமுதத்தில் அக்கறையுள்ள பலர், 'உங்களுக்கும் வயதாகி விட்டது. உங்கள் உதவியாளர்களும் ஓய்வு நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறார்கள். குமுதத்தின் எதிர்காலம் என்ன?' என்கிற மாதிரி கேட்டு யோசிக்க வைத்தார்கள்.

அப்போதுதான் நிர்வாகத்தினர், புது ரத்தம் புகுத்த மாலன், பிரபஞ்சன் ஆகிய இலக்கியவாதிகளைச் சேர்த்தார்கள்.

இலக்கியவாதிகள் இருவருக்கும் குமுதம் சரிப்பட்டு வரவில்லை. விலகி விட்டனர். நானும் கண்ணியமாய் விலகிக் கொண்டு விட்டேன். உடனடியாய் தினமலர் வாரமலர் இதழில் தொடர்கதை எழுதும் வாய்ப்பைப் பெற்றேன்.

அதே நேரத்தில் கல்கி ஆசிரியர் கி.ராஜேந்திரன் அவர்களும் என்னை கவுரவித்தார். கோகுலம் கவுரவ ஆசிரியராய் இருந்த அழ. வள்ளியப்பா அவர்கள் திடீர் மரணமடைந்திருந்த தருணம் அது. நான் துவக்கத்தில் 'தேசபந்து'வாக கல்கண்டில் மிளிர்ந்ததை அவர் அறிவார். எனவே, அழ. வள்ளியப்பா அவர்களின் இடத்தை நிரப்ப என்னை அழைத்தார். ஏதோ ஒருவகையிலே பத்திரிகைப் பணி தொடர்ந்தது. வாரமலர் இதழில் அடுத்தடுத்து மேலும் மூன்று தொடர்கதைகள் எழுதினேன். ஆனந்த விகடனில் 'அப்புறம் என்ன ஆச்சு?' என்று சுந்தர பாகவதரின் முதல் தொடர் வெளிவந்து நல்ல வரவேற்பு பெற்றது. கல்கியில் தொடர்ந்து சினிமா விமர்சனம் செய்தேன் பி.எஸ்.எஸ்., என்ற பெயரில்.

நான் குமுதத்தை விட்டு விலகிய பிறகும், ஆசிரியரை விட்டு விலகவில்லை. வெள்ளிக்கிழமை தோறும் மாலை ஐந்து மணிக்கு மேல் நடக்கும் பிரார்த்தனைக் கூட்டத்தில் கலந்து கொண்டு அவருடன் சற்று நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டுத் திரும்புவேன்.

## இரண்டாம் அப்பாயின்ட்மென்ட்

அப்போதே ஆசிரியரின் உடல் நிலை சரியாக இல்லை. பேசவும் எழுதவும் சிரமப்பட்டார்.

அக்டோபர் 1990ல் ஜ.ரா.சு., வீட்டுக்கு வந்தார். ஆசிரியர் என்னை மீண்டும் வேலைக்கு வரும்படி அழைத்ததாகச் சொன்னார்.

ஜ.ரா.சு., ஓய்வு பெறப் போவதாகவும், ஊரில் தமது நிலபுலன்களைக் கவனிக்க வேண்டியிருப்பதால், தொடர்ந்து பணியாற்ற இயலாது என்றும், ரா.கி.ர., வுக்கும் அடிக்கடி உடல் நலம் பாதிக்கப்படுவதாயும், அதனால் என் துணையை ஆசிரியர் எதிர் பார்ப்பதாயும் சொன்னார்.

வீட்டில் உள்ள எவருக்கும் நான் திரும்பக் குமுதத்துக்குச் செல்வதில் விருப்பம் இல்லை. வீட்டிலிருந்தவாறே நான் சுதந்திரமாய் எழுவதுதான் எனக்கும் சுகம், அவர்களுக்கும் வசதி என்று நினைத்தார்கள். இரண்டாண்டு காலத்தில் நான் இதற்கு முன் இத்தனை தொடர்கதைகள் எழுதிய தில்லையே!

இருந்தாலும் நான் நன்றி மறக்கவில்லை. 'முகவரி இல்லாமல் இருந்த எனக்கு, முகவரி கொடுத்தவர் ஆசிரியர். தந்தை ஸ்தானத்திலிருந்து நமது குடும்பப் பிரச்னைகளுக்கு அவர் தீர்வு காட்டியது மறக்க முடியாதது. அவரை இன்றும் என் தந்தை ஸ்தானத்தில் வைத்தே மதிக்கிறேன். அவரே

என் உதவி தேவை என்று ஆள் விட்டிருக்கும்போது, நான் அதைத் தட்டிக் கழிக்கத் தயாரில்லை' என்று கூறி, குடும்பத்தினரின் வார்த்தையை மீறிக் கொண்டு சென்றேன். 32733/37779032

போகப் போகத்தான் தெரிந்தது, ஆசிரியர் எதை எதிர்பார்த்து என்னை மீண்டும் அழைத்தார் என்பது.

பத்திரிகைக்கு இளரத்தம் தேவை என்று ஆசிரியர் குழுவில் சிலரைக் கொண்டு வந்து சேர்த்தார்கள். அந்தச் சிலரில் ஒருவரை நான் கொண்டுவந்து சேர்த்தேன்.

மூவருக்கும் பத்திரிகைத் தொழிலில் பயிற்சி தர எஞ்சியிருந்தது நான் மட்டும் தான். ரா.கி.ர.,வும் ஓய்வு பெற்று வீடு திரும்பி விட்டார்.

ப்ருப் ரீடிங்கிலிருந்து பேஜ் மேக்கப் அமைப்பு முறை வரை அவர்கள் என்னிடம் கேட்டுக் கேட்டுத் தெரிந்து கொண்டார்கள். புரிய வைத்தேன். புரிந்து கொண்டார்கள்.

'சரியான நேரத்தில் நீங்கள் திரும்ப வந்து பெரிய ஒத்தாசை செய்திருக்கிறீர்கள் மறக்க முடியாது,' என்று மனம் திறந்து எனக்குப் புகழ்மாலை சூட்டினார் ஆசிரியர்.

எனக்கு அதுபோதும், ஆசிரியர் 'வாக்' போகையில் இடறி விழுந்து விட்டதாய்க் கேட்டு ஏப்ரல் 6ம் தேதி அவரை காண வீடு சென்றேன். மூக்கிலே கொஞ்சம் சிராய்ப்புத் தெரிந்தது.

இன்னும் இரண்டு நாளில் அமெரிக்கா போவதாயும், அதுவரை குமுதத்தைக் கவனித்துக் கொள்ளும் பொறுப்பைச் சிலரிடம் ஒப்படைத்துச் செல்வதாயும் சொன்னார். அநேகமாய் எனக்கு விடைதரும் விதமாய் இருந்தது அவர் பேச்சு. ஏப்ரல் 17 ஞாயிறு இரவு ஒரு சகாப்தம் முடிந்த செய்தி வந்தது.

ஆசிரியர் என்னை ஆளாக்கியதற்குப் பிரதியாக அவர் எதிர்பார்த்த அளவுக்குச் செய்து விட்டதாகவே நிறைவடைகிறேன்.

ஆசிரியர் அழைத்ததற்காகக் குமுதம் அலுவலகத்திற்குள் திரும்ப நுழைந்தேன். இதற்கு மேல் எனக்கு அங்கு வேலை இல்லை என்று இரண்டாம் முறையாக ஓய்வு பெற்று திரும்பி விட்டேன்.

ஆசிரியர் இல்லாத அலுவலகத்துக்குள் எட்டிப் பார்க்கவும் இப்போது மனசு இடம் தர மாட்டேன் என்கிறது. அப்படித்தான் என் நண்பர்களும் சொல்கிறார்கள்.

**பின்னுரை**

நாற்பது ஆண்டுகள்! குமுதத்தில் எனது நாற்பது ஆண்டு கால நீண்ட பயணம் ஆசிரியர் அவர்களின் இறுதிப் பயணத்துடன் நிறைவெய்தி விட்டது.

எத்தனை எத்தனையோ இன்ப - துன்ப அனுபவங்கள். அவற்றில் கசப்பையெல்லாம் விழுங்கிக் கொண்டு, எண்ணிப் பார்த்துப் பெருமிதம் கொள்ளத் தக்க இன்ப நிகழ்வுகளில் சிலவற்றை இங்கு நினைவு கூர்ந்தேன்.

அதில் ஓரளவு தம்பட்ட ஓசை எழுப்பியிருக்கிறேன் என்பதை நான் மறுக்கவில்லை. அது சாமானியனாய் இருந்த என்னை, இந்த அளவு தம்பட்டம் அடித்துக் கொள்ளத் தக்கவனாய் மாற்றிய ஆசிரியரின் பெருமையை வெளிப்படுத்துவதற்காகத்தான் என்பதைப் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

நன்றி: தினமலர்

